# நபிகளாரின் தனித்தன்மைகள்

(ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்)

## கஸாயி ஸுந்நுபுவ்வத்

பொருளடக்கம்



பன்னூல் ஆசிரியர்

எஸ்.எஸ். முஹம்மது அப்துல் காதிர் பாகவி

பிஸ்மி பப்ளிஷர்ஸ்

சென்னை-2.



# நூல் விபரம்


தலைப்பு : நபிகளாரின் தனித் தன்மைகள்
(ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்)
கஸாயிஸுந்நுபுவ்வத்

தமிழாக்கம் : மௌலானா எஸ்.எஸ். முஹம்மது அப்துல்காதிர்சாஹிப் பாக்கவீ(ரஹ்)

உரிமை : மௌலவி அல்ஹாஜ்
எஸ்.எஸ்.எம். முஹம்மது ஜபார் ஜமாலி
(மொழிபெயர்ப்பாசிரியரின்புதல்வர்)

முதல் பதிப்பு : ஜனவரி 2005

பக்கங்கள் : 88

பிரதிகள் : 2000

விலை : ரூ. 20.00

வெளியீடு : பிஸ்மி புக் ஹவுஸ்
822-4, அண்ணா சாலை
மக்கா மஸ்ஜித் காம்ப்ளக்ஸ்
சென்னை - 600 002.
போன்: 52142766, 52104855

# பதிப்புரை

வணங்குவதற்கு சிரசினையும், வாழ்த்துவதற்கு நாவினையும், நினைந்துருக நெஞ்சினையும் - தந்த வல்ல அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!

அறியாமை கார் இருளை அகற்ற வந்த அண்ணல் எம்பெருமானார் அஹமது முஸ்தபா ரசூலே கரீம் (ஸல்) அவர்களை போற்றி புகழ்ந்து - வள்ளல் நபி (ஸல்) அவர்களின் வாழ்விலும் வாக்கிலும் முழு மனித சமுதாயத்திற்கு வழிகாட்டுதல் நிறைந்து காணப்படுகிறது. சென்ற காலம் - நிகழ் காலம் - வருங்காலம் - இவைகளில் எத்தனை, எத்தனை கோடான கோடி மனிதர்கள் உலகத்தில் உலாவினார்களோ அவர்களில் எல்லாம் எம்பெருமானார் (ஸல்) முதன்மையானவர்கள். அவர்களுக்கு என்று சில தனித்தன்மைகளை இறைவன் வழங்கியிருந்தான். ''கஸாயிஸுந்நுபுவ்வத்'' என்ற அரபி நூலின் மொழி பெயர்ப்பு தமிழில் பன்னூல் ஆசிரியர் மௌலானா எஸ்.எஸ்.எம். அப்துல் காதிர் பாகவியின் கைவண்ணத்தில் - அவர்களின் அருந்தவப்புதல்வர் எஸ்.எஸ்.எம். முஹம்மது ஜாபர் ஜமாலி அவர்களின் அனுமதியுடன் - இதோ உங்கள் அன்பு கரங்களில் தவழ்கிறது - இதனைப் போன்று இன்னும் பல நல்ல நூல்களை இன்ஷா அல்லாஹ் வெளியிட வல்ல இறைவனிடம் பிரார்த்திக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

பிஸ்மி புக் ஹவுஸ்

---

# பொருளடக்கம்

## பொருளடக்கம்

# நபி (ஸல்) அவர்களுக்கு தனித்தன்மைகள் ஏன்?

بسم الله الرحمن الرحيم.

الحمد لله الذي نحمده ونستعينه ونستغفره ونؤمن به ونتوكل عليه ونعوذ بالله من شرور انفسنا ومن سيئآت اعمالنا من يهده الله فلا مضل له ومن يضلله فلا هادي له ونشهد أن لا إله إلا الله وحده لا شريك له ونشهد أن محمدا عبده ورسوله اللهم صل وسلم وبارك على سيدنا محمد الهادي الأمي العربي الهاشمي القرشي. وعلى آله الطيبين واصحابه الطاهرين اجمعين.

ஒரு சபைக்கோ அரசாங்கத்திற்கோ நாட்டுக்கோ தலைவராக வருவோருக்கு சில விசேஷ உரிமைகளும், கட்டுப்பாடுகளும் அதிகாரங்களும் வழங்கப் பட்டிருப்பதை பொதுச் சேவையில் ஈடுபட்டுள்ள இக்காலத்தவர் நன்கறிவர். இவற்றின் அவசியத்தை அவர்கள் நன்கறிந்திருப்பதால் அதனைக் குறித்து விளக்க வேண்டிய அவசியமில்லை.

நபிமார்கள் எந்தெந்த சமூகத்திற்கு நபியாக அனுப்பப்பட்டு இருந்தார்களோ அந்த சமூகத்திற்குப்

## பொருளடக்கம்

பொது நபியாகவும் வழிகாட்டியாகவும் தலைவராகவும் இருந்தார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலகம் முழுவதற்கும் பொது நபியாக இருந்ததால், அவர்கள் உலகப்பொதுத் தலைவராகவும், வழி காட்டியாகவும் இருந்தார்கள். ஆதலால், அவர்களுக்குச் சில விசேஷ உரிமைகளும் கட்டுப்பாடுகளும் பொறுப்புகளும் கடமைகளும் இருந்தன. அவற்றிற்கு கஸாயிஸு என்றும் குஸூஸிய்யாத்து என்றும் அரபியில் கூறுவர்.

அவற்றைப் பற்றித் தனிப் பெரும் நூல்கள் பல இயற்றப்பட்டிருக்கின்றன. அவர்களுக்கிருந்த விசேஷங்கள் யாவற்றையும் இச்சிறு நூலினுள் அடக்கிவிட முடியாது. எனினும், அவற்றைப் பற்றி ஓரளவேனும் பொதுமக்கள் புரிந்து கொண்டிருப்பின் இஸ்லாமைப் பற்றியும், நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் பற்றியும் அஞ்ஞானிகள் கேட்கும் வினாக்கள் ஆட்சேபனைகளின் தன்மைகளைப் புரிந்து கொள்ள இயலும். அவற்றைப் பற்றிய சில விபரங்கள் சுருக்கமாகக் கீழே தரப்படுகின்றன.

### 1. நபி (ஸல்) அவர்கள் ஜக்காத், ஸதக்கா (தர்மம்) ஆகியவற்றை வாங்கலாமா?

தானதர்மங்களை தங்கள் சொந்தச் செலவிற்கு பயன்படுத்தக்கூடாது. தங்களுக்கு மட்டுமின்றி தங்கள்

குடும்பத்தாருக்கும் பயன்படுத்தக்கூடாது. ஆகவே, ஜக்காத்து, ஸதக்கா என்ற பெயரால் வரும் பணங்களையும், மற்றவற்றையும் அவற்றை அடையத் தகுதியுள்ளவர் எவர் என்று சட்டத்தில் வகுக்கப்பட்டிருக்கின்றதோ அவர்களுக்குத்தான் கொடுத்தார்கள். ஏழைகள், ஏதுமில்லாதவர்கள் என்ற பட்டியலில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், அவர்களின் குடும்பத்திலுள்ள வேறு சிலரும் கூட இருந்தனர். இந்தவர்க்கத்துடன் அவர்களும் சேர வேண்டியவர்கள்தான். ஆயினும், அவர்களை அதில் சேர்த்து ஜக்காத்து, ஸதக்கா நிதியிலிருந்து உதவி புரியவில்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பமாகிய பனூ ஹாஷிம்களும், பனூல் முத்தலிப்களும் ஜக்காத்து, ஸதக்கா ஆகிய தானதர்மங்களை வாங்குவதை விட்டு ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தனர். இவற்றை அவர்கள் வாங்க அனுமதித்திருந்தால், தங்களுக்கும் தங்களைச் சேர்ந்த ஏழைகளுக்கும் வருவாயைத் தேடிக் கொள்வதற்காக தானதர்மம் செய்யும்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளையிட்டதாக சன்மார்க்க விரோதிகள் பிரசாரம் செய்ய இடங்கிடைத்துவிடும் இதன் மூலம் சன்மார்க்கப் பிரசாரத்திற்கு இடையூறு ஏற்படலாம். பொதுமக்களில் பலர் அதனை நம்பி ஏமாற்றம் அடையலாம். *(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 730, 1119 காண்க)*

# 2. நபி (ஸல்) அவர்கள் கவிதை இயற்றலாமா?

எழுதவோ, செய்யுள் இயற்றவோ கற்றுக்கொள்ளக் கூடாது. அவற்றைச் செய்யவும் கூடாது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எழுதப்படிக்காத உம்மி நபியாக இருந்தார்கள். உம்மியாக இருப்பவரின் நாவிலிருந்து திருக்குர்ஆன் தானாக வெளிவருதற்கில்லை. அல்லாஹுதஆலா அருளியதைத்தான் அவர் பாடமிட்டுக் கொண்டு உலகினருக்கு உரைத்தார் என்பதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உம்மீ யாக இருந்தது ஒரு ஆதாரமாக அமைந்திருக்கிறது. இது ஒரு முஃஜிஸா என்னும் அற்புதமாகவும் அமைந் திருக்கிறது.

*(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 978 காண்க)*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு எழுத்தறிவு இருந்திருந்தால், அவர் படித்த மேதையாக இருந்தார் என்றும் தம்முடைய கல்வித் திறமையால் திருக்குர்ஆனைத் தம் சார்பாக சுயமாக இயற்றினார் என்றும் சன்மார்க்க விரோதிகள் வாதிக்க இடமேற்பட்டிருக்கும். இதுபோல, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு புலமையுமில்லை. சுயமாக செய்யுள் இயற்றும் ஆற்றலுமில்லை. செய்யுள்

இலக்கணத்தை கற்றுக்கொள்ளவுமில்லை. மக்களுக்கு உபதேசம் செய்கையில், பிறர் இயற்றியதை மேற்கோளாக காட்டத் தடை செய்யப்படவில்லை. ஆயினும், சுயமாக கவிதை எழுதுவதையும் இயற்றுவதையும் விட்டுத் தடுக்கப்பட்டிருந்தார்கள். திருக்குர்ஆன், வசனம் செய்யுளுமில்லை, சாமான்ய வசன நடையும் இல்லை.

அது ஒரு நூதனமான அமைப்பிலிருக்கிறது. அதனால் தான் அதைப் போன்ற வசனத்தை இயற்ற அரபி இலக்கண இலக்கிய வல்லுநர்கள் இன்றளவும் இயலாதவர்களாக இருக்கின்றார்கள். திருக்குர்ஆனின் அற்புத சக்திகளில் ஒன்றாக அதன் நடை இருந்து வருகிறது. மேலும், அரபி இலக்கண இலக்கியத்திற்கு அது மேற்கோளாகவும் அமைந்திருப்பதால், திருக்குர்ஆனுக்கு அரபி இலக்கண இலக்கியங்கள் கட்டுப்பட்டனவாகவும், திருக்குர்ஆனிலிருந்து பிறந்தவையாகவும் இருக்கின்றன. இவ்வுண்மையை அரபி இலக்கண இலக்கிய மேதைகளும் அவை பற்றிய சரித்திர வல்லுநர்களும் உணர்ந்திருக்கின்றனர்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சன்மார்க்கத்தின் நிமித்தமாக தங்கள் உம்மத்தின் (வர்க்கத்தின்) சார்பாக போரிட ஆயுதமணிந்தால், போரிட்டு வெற்றி தோல்வி என்ற முடிவைக் காணாமல் ஆயுதங்களைக் கீழே வைக்கக் கூடாது. இந்தச் சட்டம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டுமின்றி எல்லா நபிமார்களுக்கும் இருந்தது.

# 3. நபி (ஸல்) அவர்கள் உள்ளொன்று வைத்துப் புறமொன்ற பேசுவதை அறிவார்களா?

புறத்தோற்றத்தில் காணப்படுவதை ஆதாரமாகக் கொண்டு நடவடிக்கை எடுக்காமல் அதற்கு மாறான முறையில் நடவடிக்கை எடுத்துக் கொள்ள உரிமை வழங்கப்பட்டிருந்தது. உள்ளொன்று வைத்து புறமொன்று பேசுவதையோ செய்வதையோ உணரும் சக்தியை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அல்லாஹுதஆலா கொடுத்திருந்ததுடன் அவை பற்றிய இரகசியத்தை அவ்வப்போது அறிவித்துக் கொண்டே இருந்தான். இந்த அடிப்படையில் தான் ஹுதைபிய்யா உடன்படிக்கையை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அங்கீகரித்தார்கள். ஏனைய ஸஹாபிகள் புறத்தோற்றத்தை கவனித்து உடன்படிக்கை நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ளவிரும்பவில்லை. ஆனால், அதன் உள் வயணத்தை அல்லாஹுதஆலா அறிவித்ததால் ஸஹாபிகளின் எண்ணத்திற்கு மாறாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உடன்படிக்கையை ஏற்றுக் கொண்டார்கள். வெளித்தோற்றத்தில் சாதகமாக காணப்பட்ட போதினும், அதன் பலன் நடைமுறையில் எதிரிகளுக்குப் பாதகமாகவும் முஸ்லிம்களுக்குச் சாதகமாகவும் இருந்தது.

இதுபோல பல காரியங்களில் நபி ஸல்லல்லாஹு

அலைஹி வஸல்லம் அவர்கள் நடந்து கொண்டார்கள். இக்காலத்தைய ஐரோப்பிய மக்கள் மொழியில் இதனை ஏதேச்சதிகாரம் என்று தான் சன்மார்க்க விரோதிகள் கூறுவர். ஆனால், அந்தரங்கத்தில் அல்லாஹு தஆலாவின் கட்டளைப்படி அவனுக்குப் பணிந்து தான் சமூக நன்மையை முன்னிட்டு நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் நடந்திருக்கின்றார்கள்.

## 4. நபி (ஸல்) அவர்கள் யாரைத் திருமணம் செய்யக்கூடாது?

வேதக்காரிகளையும் அடிமைப் பெண்களையும் திருமணம் செய்யக்கூடாதென நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தடுக்கப்பட்டிருந்தார்கள். வேதக்காரிகள் இஸ்லாத்தைத் தழுவிவிட்டால், திருமணம் செய்யலாம், அடிமைப் பெண்கள் விடுதலை அடைந்து விட்டால், திருமணம் செய்யலாம். அன்னை ஸபிய்யா(ரலி) அவர்கள் யூதத் தலைவரின் புதல்வி. அவர் இஸ்லாத்தை தழுவிய பின்னர், அவரை திருமணம் செய்தார்கள்.

*(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 235 காண்க.)*

அன்னை ஜுவைரிய்யா (ரலி) அவர்கள் அடிமையாக்கப்பட்டவர். தன்னை விடுவித்துக்கொள்ள தன் எஜமானரிடம் உரிமைச் சீட்டு எழுதி வாங்கிய

பின்னர், அச்சிட்டில் கண்ட-பணத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கொடுத்து, விடுதலை செய்த பின்னர் திருமணம் செய்தார்கள்.

(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1108 காண்க.)

தனக்குச் சொந்தமான அடிமைப் பெண்களுடன் உடலுறவு சொள்ளலாகாது என்ற கொள்கையுள்ள காதியானி போன்றவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புதல்வரான ஸைய்யிதுனா இப்ராஹீம் (ரலி) அவர்களது தாயாரான மாரியத்துல் கிப்திய்யா (ரலி) அவர்களை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்தார்கள் என்றும் திருணம் செய்து இருக்கக் கூடும் என்றும் எழுதி வைத்திருக்கிறார்கள். ஆனால், அவரை உரிமைவிட்டு விடுதலை செய்ததை அவர்கள் நிருபிக்கவில்லை. அடிமைப் பெண்ணாக இருக்கிற நிலையில் திருமணம் செய்வது கூடாது என்ற விசேஷக் கட்டுபபாடு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டும் விசேஷமாக இருக்கிறதென்பதை அவர்கள் உணரவில்லை போலும்.

அரசு ஊழியர்கள் வெளிநாட்டுப் பெண்களை திருமணம் செய்யக்கூடாது என்று இக்காலத்தைய அரசாங்கங்கள் சட்டமியற்றி அந்த ஊழியர்களை வேலையைவிட்டு நீக்குவதை அல்லது அந்தப்

பெண்ணை விவாகரத்து செய்யும்படி அந்த ஊழியர்களை நிர்ப்பந்திப்பதை அல்லது அந்தப் பெண்கள் பிறந்த நாட்டின் பிரஜா உரிமையை இழந்து விட்டு கணவர் நாட்டின் பிரஜையாகப் பதிவு செய்து கொள்ள வேண்டும் என்று அனைத்து அரசுகள் நிர்ப்பந் திப்பதை இக்காலப் பொதுமக்கள் உணர்ந்து இருப்ப தால், ஒரு மார்க்கத்தைப் பிரச்சாரம் செய்கிற நபியான வர் அந்நியமதப் பெண்களை திருமணம் செய்யக்கூடாது எனத் தடுக்கப்பட்டு இருப்பதன் நியாயத்தை விளக்க வேண்டிய அவசியமில்லை.

ஒரு நாட்டு சாதாரண பிரஜையிலுள்ள பெண்ணை மணம் செய்யலாகாது. ஒரு நாட்டு இளவரசி சாதாரண பிர ஜையை மணந்து கொள்ளலாகாது. அவ்வாறு மணந்து கொள்வதாயின் அரசுரிமைய இழந்துவிடவேண்டும். பா ராளுமன்றத்தின் சம்மதத்தின் பேரிலேயே அவர்கள் மணம் புரிய வேண்டும் என்று சட்டமியற்றி இருப்பதையும் இச் சட்டத்திற்கேற்ப மன்னர்கள் முடிதுறப்பதையும் இளவர சிகள் அரச குடும்ப உரிமைகளைத் துறப்பதையும் இக்காலத்தவர் உணர்ந்திருப்பதால், நபியாக இருப்பவர் அடிமைப் பெண்ணை மணக்கலாகாது என்று தடை விதிப்பதைப் புரிந்து கொள்ளமுடியும். ஆதலால், இவ்வி ஷயத்தைப் பற்றி அதிகம் விவரிக்க வேண்டியதில்லை.

## 5. நபி (ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டிய நிலையில் திருமணம் செய்தார்களா?

ஹஜ் அல்லது உம்ராவிற்காக இஹ்ராம் கட்டி இருக்

கையில் திருமணம் செய்வது கூடாது என்பது பொது விதி. இதிலிருந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விலக்களிக்கப்பட்டிருந்தார்கள். ஹிஜ்ரீ 7ஆம் வருடத்தில் திருமக்காவிற்கு உம்ரா செய்யச் சென்றிருந்தபோது இஹ்ராம் கட்டி இருக்கையிலேயே அன்னை மைமூனா (ரலி) அவர்களை திருமணம் செய்தார்கள். உம்ரா முடிந்து திருமதீனாவிற்குப் புறப் பட்டு வருகையில் ஸரப் என்ற இடத்தில்தான் கணவன் மனைவிகள் இருவரும் சந்தித்தனர். இவ்விதமாக இஹ்ராம் கட்டி இருக்கும்போது திருமணம் செய்ய சட்டமில்லை. ஆனால், நிச்சயதார்த்தம் செய்யத் தடையில்லை.

*(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 862, 1611 காண்க.)*

## 6. நபி (ஸல்) அவர்கள் மஹர் தொகை கொடுக்க வேண்டுமா?

திருமணம் செய்வோர் மணப்பெண்ணுக்கு மஹர் என்னும் திருமணக் கட்டணம் கொடுக்க வேண்டும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மஹர் என்னும் திருமணக் கட்டணம் கொடுப்பதை விட்டு விலக் களிக்கப்பட்டிருந்தார்கள். அன்னை ஸபிய்யா (ரலி) அவர்களுக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மஹர் என்னும் திருமணக் கட்டணம் கொடுக்க வில்லை.

*(எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 235 காண்க.)*

# 7. நபி (ஸல்) அவர்களுக்கு ஜக்காத் கடமையா?

தங்களுக்குள்ள பொருளில் விகிதாசாரடப்படி ஒவ்வொருவரும் ஜக்காத்துக் கொடுக்க வேண்டும். நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் இதிலிருந்து விலக்களிக்கப்பட்டிருந்தார்கள்.

நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்கள் நபியாக இருந்ததால் தங்களுக்கென பிரத்யேகமாக சொத்துக்களைச் சேர்த்துக் கொள்வதிலிருந்து தடுக்கப்பட்டிருந்தார்கள். ஆனால், அவர்களுக்கிருந்த சொத்துக்களெல்லாம் அவர்களுடைய குடும்பச் செலவிற்காக ஒதுக்கப்பட்டவைகள் தான். அவற்றின் வருவாயை அவர்கள் அனுபவித்தார்கள். அவர்களின் மறைவிற்குப் பின்னர் அவை யாவும் பொதுமக்களின் சொத்துக்களாகிவிட்டன. அவர்களின் புதல்வியோ இதர பந்துக்களோ உம்மஹாத்துல் முஃமினின்களோ வாரிசுச் சட்டப்படி அவற்றைப் பகிர்ந்து கொள்ளவில்லை. இதன்படி அவர்களுக்கு சொந்தச் சொத்தில்லாததால் ஜக்காத்துக் கொடுப்பதை விட்டு விலக்கப்பட்டார்கள். இது இக்காலத்தைய அரசாங்கத் தலைவர் அதிகாரப்பூர்வமாக வசிக்கும் அரசாங்கமாளிகைகளுக்கு அவர்கள் வரி கொடுப்பது இல்லை. உத்தியோக முறையில் அவர்களுக்கு வருகிற அன்பளிப்புகளுக்கு வரிகட்டுவதில்லை. அவர்கள் பதவியிலிருந்து ஒய்வு பெறும்போது அம்மாளிகையையும் அன்பளிப்புகளையும் அரசாங்கத்திடம் ஒப்படைத்துவிட

வேண்டும். அவருக்குப் பதிலாக பதவி ஏற்பவர் அவற்றை அனுபவித்துவிட்டு அடுத்தவரிடம் ஒப்படைக்க வேண்டும். இதே நிலைதான் நபி ஸல்லல்லாஹு அலை வஸல்லம் அவர்களின் சொத்துக் களுக்கு இருந்தன. அவர்கள் தங்களுக்கென எந்த பிரத் தியோக சொத்துக்கும் உரிமையாளராக இருந்ததில்லை.

(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 223, 1280, 1115, 1521, 1835, 1838, 1848, 1896, 1897 காண்க)

## 8. நபி (ஸல்) அவர்களின் சொத்துக்கு யார் வாரிசு?

நபி ஸல்லல்லாஹு அலை வஸல்லம் அவர்களின் சொத்துக்களை அடைவதற்கு அனந்தரவாரிசு எவரு மில்லை.

عن عمرو بن الحارث رضي الله تعالى عنه قال: مَا تَرَكَ رَسُوْلُ اللهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ عِنْدَ مَوْتِهِ دِرْهَمًا وَلاَ دِيْنَارًا وَلاَ عَبْدًا وَلاَ اَمَةً وَلاَ شَيْئًا إلاَّ بَغْلَتَهُ الْبَيْضَاءَ وَسِلاَحَهُ وَ اَرْضًا جَعَلَهَا صَدَقَةً. رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் தர்மமாக ஏற்படுத்திவிட்ட தங்க ளுடைய வெள்ளை கழுதையையும், ஆயுதங்களையும் ஒரு பூமியையும் தவிர தங்களுடைய மரணத்தின்போது

தங்க நாணயத்தையோ, வெள்ளி நாணயத்தையோ, அடிமையையோ, அடிமைப் பெண்ணையோ விட்டுச் செல்லவில்லை.

அறிவிப்பாளர்: அம்ருப்னுல் ஹாரித் (ரலி) நூல்: புகாரீ.

*(விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1158 விரிவுரை காண்க.)*

## 9. நபி (ஸல்) அவர்கள் திருமண ஒப்பந்தம் செய்ய வேண்டுமா?

ஒரு பெண் தன்னை நன்கொடையளிப்பதாக நபி ஸல்லல்லாஹு அலை வஸல்லம் அவர்களிடம் கூறினால் அவள் தன்னை அவர்களின் மனைவியாக ஒப்புக் கொடுத்ததாகக் கருத வேண்டும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விரும்பினால் அவளுடன் வாழலாம். அதற்காக பிரத்தியேகமாக திருமண ஒப்பந்தம் செய்ய வேண்டுமென்ற அவசியமில்லை. அல்லது தங்களுக்கு விருப்பப்பட்ட வேறு நபருக்கு அவளுடைய சம்மதத்தைப் பெறாமலேயே திருமணம் செய்து கொடுத்துவிடலாம். இந்த முறையில் தான் கௌலா பின்து ஹக்கீம் (ரலி) என்ற பெண், தன்னை நபி ஸல்லல்லாஹு அலை வஸல்லம் அவர்களுக்கு நன் கொடையளித்தாள். அதனை நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் அங்கீகரித்துப் பின்னர் அவளுடைய சம்மதத்தைப் பெறாமலேயே வேறு ஒருவருக்கு திருமணம் செய்து கொடுத்தார்கள்.

(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1795 காண்க.)

மணமக்கள் இருவரின் சம்மதமில்லாவிடில் திருமணம் இல்லை என்பது பொதுவிதி நபி ஸல்லல்லாஹு அலை வஸல்லம் அவர்களுக்கு அவள் தன்னை நன்கொடைய ளித்ததால், தன்னுடைய இந்த உரிமையையும் நபி ஸல் லல்லாஹு அலை வஸல்லம் அவர்களின் சம்மதமே அவ ளுடைய சம்மதாகிவிட்டது. இந்த உரிமை நபி ஸல்லல் லாஹு அலை வஸல்லம் அவர்களுக்கு மட்டும் தான். மற்றவர்களுக்கு இல்லை. ஆதலால், ஒரு பெண் தன்னை ஒரு ஆடவருக்கு நன்கொடையளித்தால், அவ்வாடவர் திருமண ஒப்பந்தமின்றி அவளை மனைவியாக வைத்து வாழ முடியாது. அவளின் சம்மதமின்றி சுயேச்சையாக வேறு எவருக்கும் அவளை திருமணம் செய்து கொடுக்க வும் கூடாது.

## நபி (ஸல்) அவர்களின் மனைவியரை பிறர் ஏன் திருமணம் செய்யக்கூடாது?

நபி ஸல்லல்லாஹு அலை வஸல்லம் அவர்களுக்குப் பின்னர் அவர்களுடைய மனைவியர்களான உம்ம ஹாத்துல் மு.:மினீன்கள் வேறு எவரையும் மணந்து கொள்வது கூடாது. (ஹராம்)

இவர்கள் யாவரும் ஆத்மார்த்த தந்தையாகிய நபி ஸல்லல்லாஹு அலை வஸல்லம் அவர்களின் வாழ்க் கைத் துணைவிகளாக இருந்ததால் எல்லா ஆடவர்களுக் கும் ஆத்மார்த்த தாய்மார்களாகிவிட்டார்கள். ஆதலால் அவர்களை மற்றவர்கள் மணக்கச் சட்டமில்லை. இது போலவே, நபி ஸல்லல்லாஹு அலை வஸல்லம் அவர் களின் அடிமைப் பெண்களின் நிலையுமாகும். ஆதலால், அவர்களும் மற்றவர்களுக்கு (ஹறாம்) கூடாது.

وَاَزْوَاجُهٗۤ اُمَّهٰتُهُمْ 33 : 6

இன்னும் அவருடைய மனைவியர் அவர்களின் தாய்மார்கள். *33:6*

وَلَاۤ اَنْ تَنْكِحُوْۤا اَزْوَاجَهٗ مِنْۢ بَعْدِهٖۤ اَبَدًا

اِنَّ ذٰلِكُمْ كَانَ عِنْدَ اللّٰهِ عَظِيْمًا 33 : 53

அவருடைய மனைவியரை எப்போதும் திருமணம் செய்யாதீர்கள். நிச்சயமாக இது அல்லாஹ்விடம் மிகப் பெரிய விஷயமாகும். *33:53*

## 11. நபி (ஸல்) அவர்கள் நினைத்தவுடன் திருமணம் செய்ய முடியுமா?

இவ்வுலகில் கணவன் மனைவிகள் இருவரும் சம்ம தித்து அவர்களின் விருப்பப்படி திருமணம் செய்கின்

றனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்கள் விருப்படி எவரையும் திருமணம் செய்யமுடியாமல் தடை செய்யப்பட்டு இருந்தார்கள். மற்றவர்கள் தங்கள் விருப்பப்படி தங்கள் மனைவியர்களை விவாகரத்துச் சொல்லிவிட்டோ அல்லது அவர்கள் மரணமடைந்த பிறகோ வேறு பெண்களை சட்டப்படி திருமணம் செய்யலாம். ஆகவே, ஒருவருக்குப் பின் ஒருவராக எத்தனை பெண்களையும் ஆடவர்கள் மணக்கலாம். ஆனால், ஏக காலத்தில் நான்கு பேர்களுக்கு மேல் அதிகமான மனைவியருடன் வாழலாகாது. திருமண உறவு கொள்ளலாகாது என்பது ஒன்றுதான் தடை.

நபி ஸல்லல்லாஹு அலை வஸல்லம் அவர்களுக்கு இந்தத் தடைமட்டுமில்லை. ஆதலால், நான்கு பேர்களுக்கு அதிகமாக ஒன்பது பேர்களுடன் திருமண உறவு வைத்து ஏக காலத்தில் அவர்களுடன் வாழ்ந்தார்கள். அவர்களுக்குப் பிறகு வேறு எந்தப் பெண்ணும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஹலால் இல்லை. அவர்களை விவாகரத்து சொல்லிவிட்டு வேறு பெண்களை அவர்களுக்குப் பதிலாக திருமணம் செய்யவும் அனுமதி இல்லை. ஆகவே, நான்கு மனைவியருக்கு மேல் திருமணம் செய்யக்கூடாது என்ற சட்டம் வந்த பின்னர் மேற்கண்ட ஒன்பது மனைவியரில் நான்கு பேர்களுடன் வாழ்க்கை நடத்தினார்கள். மற்றவர்களிடத்தில் திருமண உறவு மட்டும் வைத்து கணவர் மனைவி என்ற பெயருடன் வாழ்ந்தார்கள். இக்கட்டுத்திட்டங்களை

யும் தடையையும் அறிந்தோ அறியாமலே சன்மார்க்க விரோதிகள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பாரபட்சமாக நடந்துகொண்டார்கள். தங்க ளுக்கு மட்டும் நான்கு பேர்களுக்கு அதிகமான மனைவி யரை வைத்துக்கொண்டு ஏனைய முஸ்லிம்களுக்கு நான்கு மனைவியர் என்று கட்டுப்படுத்திவிட்டார்" என்று ஆட்சேபிக்கின்றனர். இது அவர்களின் அறியாமை அல் லது இஸ்லாத்திற்கு விரோதமான எதிர்ப்பிரச்சாரம் என்றே கொள்ளவேண்டும்.

திருக்குர்ஆன் வசன எண் 4:3, 33:50,51,52,53 காண்க

(எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1715 விரிவுரை காண்க.

## 12. நபி (ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டாமல் மக்காவில் நுழையலாமா?

திருமக்காவினுள் ஹஜ்ஜு அல்லது உம்ராவிற்கு இஹ்ராம் கட்டாமல் இஹ்ராம் எல்லைகளுக்கப்பால் இருப் பவர் நுழையக்கூடாது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஹ்ராம் கட்டாமல் நுழையலாம்.

## 13. நபி (ஸல்) அவர்கள் தங்கள் விருப்பப்படி தீர்ப்பு கூறலாமா?

அல்லாஹு தஆலா ஏற்படுத்தியுள்ள குற்றச்

செய்கைகள் விஷயத்தில் தங்கள் யுக்திப்படி தீர்ப்புச் செய்ய எவருக்கும் உரிமை இல்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டும் அதில் விதி விலக்குண்டு. அவர்களுக்கு அஞ்ஞானமும் இருந்ததால், அவர்கள் தங்கள் யுக்திப்படி தீர்ப்புச் செய்யலாம். இவ் வுரிமை இருந்ததால் தான் திருமக்காவின் மீது படையெ டுத்ததை மக்கா வாசிகளுக்கு ஹாத்தபுன்னு அபீபல்த்தஆ (ரலி) அறிவித்தபோது அவரைத் தண்டிக் காமல் விட்டுவிட்டார்கள். ராணுவ நடவடிக்கையை எதிரி களுக்குத் தெரிவிப்போருக்கு இக்காலத்தைய அரசாங் கங்கள் மரணதண்டனை விதிப்பது சர்வ சாதாரணமான காரியம். அவர் செய்த குற்றமும் அந்த வகையைச் சேர்ந் ததாக இருந்தும் கூட அவரை விசாரணை செய்து குற்றம் நிருபிக்கப்பட்ட பின்னர் தண்டிக்காமல் விடுதலை செய் தார்கள். இவ்விபரத்தை எம்மால் எழுதப்பட்ட ஹளரத் ரசூலுல்லாஹ் மூன்றாம் பாகத்தில் திருமக்காவின் படை யெடுப்பு பற்றிய விபரத்தில் காணலாம். இது போல தபூக் போரின் போதும் ராணுவ சேவைக்கு வராமல் போலிக் காரணங்களைக் கூறியவர்களையும் தண்டிக்கவில்லை.

*(எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1739 காண்க)*

## 14. மற்ற நபிமார்களைவிட நபி (ஸல்) அவர்களிடம் இருந்த தனிச்சிறப்புகள் என்ன?

அகம்புறம் ஆகிய இருவகை அதிகாரங்களும் நபி

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அளிக்கப்பட்டு இருந்தன. புற ஷரீஅத்தும் ஆத்மார்த்த ஹக்கீக்கத்தும் (அகமியமும்) அவர்களிடம் ஒருங்கே அமைந்திருந்தன. ஏனைய நபிமார்களுக்கு இவ்விரண்டில் ஏதேனும் ஒன்றுதான் அளிக்கப் பட்டிருந்தது.

## 15. நபி (ஸல்) அவர்களை பிறர் விசாரிக்கலாமா?

நீதிபதிகள் தங்களுடைய சொந்த வழக்குகளையோ மக்களின் வழக்குகளையோ விசாரித்துத் தீர்ப்புச் செய்யக் கூடாது. இதில் அவர்கள் கட்சிக்காரர்களாக இருப்பதால், விருப்பு வெறுப்பிற்கு ஆளாக நேரிடும். ஆதலால் வேறு ஒரு நீதிபதியின் விசாரணைக்கும் தீர்ப் புக்கும் விடவேண்டும் என்பது இஸ்லாமியச் சட்டம். இவ் வுலகிலுள்ள எல்லா அரசாங்கங்களும் இதனை அங்கீ கரித்து கோர்ட்டில் அமுல் செய்கின்றன. நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இதில் விலக்களிக்கப்பட்டு இருந்தார்கள். தங்களுடைய சொந்த வழக்குகளையும் கூட விசாரித்துத் தீர்ப்புச் செய்ய உரிமையளிக்கப்பட்டி ருந்தார்கள். ஏனெனில், அவர்களுடைய சொல், செயல் யாவும் அல்லாஹுதஆலாவின் விருப்பத்திற்குட்பட்டே இருந்தன. தங்கள் சொந்த விருப்பப்படி எதையும் மார்க்க விஷயத்தில் சொல்லவோ செய்யவோ இல்லை. ஆதலால், நீதி வழங்குவதில் விருப்பு வெறுப்புக்கு உட்படுவதற்கிடமில்லை. இதனால் தான் பாத்திமா என்ற

குறைஷிப் பெண் திருடிய குற்றத்திற்காக தண்டிக்கப் பட்டபோது, அத்தண்டனையை நிறைவேற்ற வேண்டா மென உஸாமத்து இப்னு ஜைத் (ரலி) மூலம் குறைஷித் தலைவர்கள் சிபாரிசு செய்ததை நிராகரித்து "முஹம்மதுடைய மகள் பாத்திமா இக்குற்றத்தைச் செய் திருந்தாலும், இத்தண்டனையைத் தான்விதிப்பேன்" என்று கூறி, நீதி விசாரணையில் தங்களுடய பாரபட்ச மின்மையைக் காட்டினார்கள். முஸ்லிம்களுக்கும், முஸ்லிம் அல்லாதாருக்குமிடையில் ஏற்பட்ட தகராறுக ளின் போதும் முஸ்லிம் அல்லாதார் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையே அவ்விவகாரங் களை விசாரித்துத் தீர்ப்புச் செய்ய நீதிபதியாக நியமித்தனர்.

பார்க்க திருக்குர்ஆன் வசன எண் 53:3,4 33:36 காண்க

(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1451, 1500, 1501, 1502 காண்க)

## 16. நபி (ஸல்) அவர்கள் கோபமுற்ற நிலையில் தீர்ப்புச் சொல்லலாமா?

கோபமாக இருக்கிற நேரங்களில் தீர்ப்பு வழங்கக் கூடாது. அச்சமயத்தில் மூளை சரியாக வேலை செய்யாது என்பது நீதிபதிகள் கடைப்பிடிக்க வேண்டிய ஒரு நியதி. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இதில் விலக்களிக்கப்பட்டு இருந்தார்கள். ஏனெ னில், அவர்கள் தங்கள் சொந்தக் காரியத்திற்காக

யாரையும் கோபித்ததும் இல்லை, வஞ்சம் தீர்த்ததும் இல்லை. அவர்களுடைய கோபம் யாவும் அல்லாஹ்வின் சன்மார்க்கத்திற்காகவும் திருப்திக்காகவுமே இருந்ததால், கோபவேளையிலும் அவர்கள் நீதி தவறுவதில்லை.

## 17. நபி (ஸல்) அவர்களின் சாட்சியத்திற்கு ஆதாரம் வேண்டுமா?

தங்களைப் பற்றியோ தங்களுடைய சந்ததியினரைப் பற்றியோ சாதகமான சாட்சியம் கூறினால், அந்த சாட்சியம் சட்டப்படி அங்கீகரிக்கத்தக்கதாக இருந்தது. இன்றைய கோர்ட்டுகளில் ஒருவர் தனக்கு சாதகமாக வாக்குமூலம் கொடுத்தால் அது சரியானது தான் உண்மையானது தான் என்பதற்கு ஆதாரங்காட்ட வேண்டும் அல்லது வேறு சாட்சிகளைக் கொண்டு நிரூபிக்க வேண்டும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இவை தேவையில்லை.

## 18. நபி (ஸல்) அவர்களின் சில சிறப்பம்சங்கள்

சிறுபாவம் பெரும் பாவ்ங்களை விட்டு அவர்கள் பாதுகாக்கப்பட்டவர்கள், அவர்கள் பாவமற்றவர்கள்.

சோம்பலால் அல்லது வேறு காரணத்தால் அவர்கள் கொட்டாவி விட்டதில்லை.

(எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 2004 காண்க)

உலகம் முழுவதற்கும் அவர்கள் பொது நபி. இச்சிறப்பு வேறெந்த நபிக்கும் இல்லை.

அவர்கள் மீது ஈ-யோ கொசுவோ உட்காருவதில்லை.

எதிரிலிருப்பதைப் பார்ப்பது போல பின்னால் இருப்பதையும் பார்ப்பார்கள்.

(எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 259 காண்க)

பகலில் பார்ப்பது போலவே இரவிலும் பார்ப்பார்கள்.

அவர்களுக்கு நிழலில்லை.

எல்லா நபிமார்களுக்கும் கடைசியானவர்கள். அவர்களுக்குப்பின்னர் வேறு நபி இல்லை.

(எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமி இஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1652 காண்க)

மறுமை நாளில் யாவருக்கும் முதலாவதாக உயிர் பெற்றெழும்புவார்கள்.

உலகில் தோன்றிய யாவருக்கும் எல்லா நபிமார்களுக்கும் அவர்களுடைய உம்மத்திற்கும் முதன் முதலாக ஷபாஅத்துச் செய்வார்கள். இதற்கு ஷபாஅத்தே குப்ரா (பெரிய பொதுமன்றாட்டம்) என்று

பெயர். இதற்கப் பிறகு தான் ஒவ்வொரு நபியும் தங்களுடைய உம்மத்திற்காக ஷபாஅத்து செய்வர்.

*(எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1705, 1706 காண்க)*

அவர்களுடைய ஜீவியத்தைக் குறிப்பிட்டு அல்லாஹ் பிரமாணம் செய்துள்ளான். இவ்விதமாக வேறெந்த நபியையும் குறிப்பிட்டு பிரமாணம் செய்யவில்லை.

சுவர்க்கத்தில் முதலாவதாகப் பிரவேசிப்பார்கள். அவர்களுக்குப்பிறகு தான் ஏனைய நபிமார்களும், அவர்களுடைய உம்மத்துக்களும் பிரவேசிப்பர்.

திடுக்கத்தின் மூலம் உதவி செய்யப்படல்: ஒரு மாத நடை தூரத்திலுள்ளவர்களும் கூட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி பயந்து அச்சம் கொண்டு அடங்கிவிடுவதன் மூலம் சன்மார்க்கப் பிரசாரத்தில் வெற்றியடைந்து கொண்டிருந்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வர்த்தகத்தில் மூலம் போதியளவு சம்பாதித்து செல்வந்தரானார்கள். ஆயினும், சமூக நலனுக்காக உழைத்ததின் மூலம் அவையாவற்றையும் அப்பணியிலேயே செலவு செய்து விட்டார்கள். தங்களுடைய சொந்த முதலைச் செலவு செய்தது மட்டுமின்றி தங்கள் இல்லக்கிழத்தி அன்னை கதீஜா (ரலி) அவர்களின் பொருட்களையும் அறப்பணியில் செலவிடச் செய்துவிட்டார்கள். ஆதலால்,

நபித்துவத்தை அடைந்த பின்னர் செல்வந்தர்களின் வர்க்கத்தில் இல்லாமல் ஏழைகளின் வர்க்கத்திலேயே இருந்தார்கள். ஆதலால், அவர்களுடைய சன்மார்க்கப் பிரச்சாரத்தை முதலாளி வர்க்கம் திருமக்காவிலும், அதற்கு வெளியிலும் எதிர்த்தது. அவ்வர்க்கத்தின் ஆதரவிலும் செல்வாக்கிலுமுள்ள ஏழை வர்க்கமும் எதிர்த்தது. என்றாலும், எவருக்கும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நேரடியாக எதிர்த்து அவர்களைக் கொலை செய்வதற்கத் துணிவேற்பட வில்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர் களைக் கொலை செய்பவருக்கு வெகுமதி அளிப்பதாகக் கூறி, பிறரைத் தூண்டினரேயன்றி, அவர்கள் நேரடியாக அம்முயச்சியில் ஈடுபடவில்லை.

வெகுமதிக்கு ஆசைப்பட்டு வெளியில் வந்த உமர் இப்னுல் கத்தாப் (ரலி) தம் சகோதரியின் வீட்டில் நடந்த சம்பவத்திற்குப் பின்னர் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைச் சந்திக்க அர்க்கம் (ரலி) என்பவரின் இல்லம் சென்றபோது நடுங்கிக் கொண்டு தான் சென்றார்கள். அவ்வீட்டின் தலைவாசலை அவர் தட்டியபோது அவருடைய சப்தத்தைக் கேட்ட மற்ற வர்கள் நடுங்கினர். கதவைத் திறந்துவிடும்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளை யிட்டதன் காரணமாக கதவு திறக்கப்பட்டது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அருகில் அவர் வந்தபோது அவருடைய சட்டையைப் பிடித்து, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்

கள் இலேசாக இழுத்தபோது, அவர் தடுமாறி முழங் காலால் ஊன்றும் படி விழுந்தார். நேருக்கு நேராக நிற்ப தற்கு முடியாமல் நடுங்கிக் கொண்டு அமர்ந்தார்கள்.

திருமக்காவில் இஸ்லாத்தைத் தழுவியவர் களைத்தான் சன்மார்க்கவிரோதிகள் இடையூறு செய்தனர். கொடுமைப்படுத்தினர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உபதேசம் பிறர் செவி யில் கேட்கா வண்ணம் கூச்சலிட்டனர். உக்காள் சந்தை யிலும் இதர இடங்களிலும் பிரச்சாரத்திற்கச் சென்ற போதும் தன்னந்தனியாகச் சென்றார்கள். சில சமயங்க ளில் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களையோ அல்லது ஜைதுப்னு ஹாரிதா (ரலி) அவர்களையோ அழைத்துச் செல்வார்கள். அவர்களுடைய பிரச்சாரத்தை எவரும் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனாலும், அவர்களைக் கொல்ல எவரும் துணியவில்லை. தாயிப் நகருக்குச் சென்றபோதும் கூட அதன் தலைவர், ஊரிலுள்ள குழந் தைகளை ஏவிவிட்டுத் தொந்தரவு செய்தாரேயன்றி அவர்கள் கொலை செய்ய அவரும் துணிந்தாரில்லை.

இறுதியாக மக்கமா நகரிலுள்ள குறைஷித் தலைவர்கள் ஒன்று கூடி ஆலோசனை செய்து கொலை செய்து விடுவதாகத் தீர்மானித்த போதும் கூட அதனை நிறைவேற்ற தனி நபர் முன் வரவில்லை. எல்லோரின் கூட்டு முயற்சியால் கொலை செய்வதாகத் தீர்மானித்து குடும்பத்திற்கொருவராகச் சேர்ந்தும் கூட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின்

வீட்டிற்குள் பிரவேசிக்க அவர்களுக்குத் துணிகரம் ஏற்ப டாமல் வெளியில் வருவதை எதிர்பார்த்துக் காத்திருந்த னர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன்னந்தனியே வெளியில் வந்து அவர்கள் மீது 'ஷாஹத்தில் உஜூஹ்' என்று மண்ணைத் தூவி விட்டுச் சென்ற போதும் கூட அவர்கள் மீது வாள் பிரயோகம் செய்ய அவர்களுக்கு தைரியம் உண்டாகாமல் வெறுமனே அமர்ந்திருந்தார்கள்.

(எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1549 காண்க)

ஹிஜ்ரத்திற்குப் பின்னர் ஈரான் சக்கரவர்த்தியின் ஆளுகைக்குட்பட்டிருந்த யமன் நாடும், ஹிர்க்கல் சக்கர வர்த்திக்குட்பட்டிருந்த வடக்கு அரப் ராஜ்யங்களும் சண்டை சச்சரவின்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஆளுகைக்குட்பட்டன. இவ்விரு சக்கரவர்த்திகளின் சம்மதத்தைக் கேட்டு இவைகள் இஸ்லாமிய ராஜ்யத்துடன் சேரவில்லை. இதனை அவர்கள் பார்த்துக்கொண்டே மௌனமாக இருந்தனர். ஹிர்க்கல் சக்கரவர்த்தி போர் தொடுப்பதற்காக படை திரட் டுகிறார் என்பதைக் கேள்விப்பட்டு நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தங்கள் படையுடன் தபூக் சென்று ஒரு மாத காலம் வரையில் காத்திருந்தார்கள். படை திரட்டும் உத்தரவை அவர்கள் ரத்து செய்துவிட்டு மௌனமாக இருந்துவிட்டார்கள்.

இடையிலுள்ள கோத்திரங்கள் திருமதீனாவின் மீது படையெடுக்க முஸ்திப்பு செய்வதையும் முஸ்லிம் படைகளின் வருகையை அறிந்து அவைகள் கலைந்து விடுவதையும் பற்றிய விபரங்களை எம்மால் எழுதப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல்லாஹ் மூன்றாம் பாகத்தில் நீங்கள் படித்திருக்கலாம். இவ்வெற்றிகள் யாவும் இவ்விசேஷ உதவியின் மூலமே ஏற்பட்டன.

*(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1690 காண்க)*

போர்க்களத்தில் பகைவர் விட்டுச் சென்ற பொருள்களை இதற்கு முன்னர் வாழ்ந்த நபி மார்களுக்கும் அவர்களின் உம்மத்து (வர்க்கங்)களுக்கும் அல்லாஹ் அனுமதிக்கவில்லை. அக்காலத்தில் அவை யாவும் நெருப்பில் இரையாக்கி அழிக்கப்பட்டன. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அவைகள் அனுமதிக்கப்பட்டன. அவற்றை முஸ்லிம்கள் எப்படிப் பகிர்ந்து கொள்ளவேண்டும் என்ற விகிதாச்சார முறைகளும் கூட திருக்குர்ஆனில் அறிவிக்கப்பட்டன.

புவி முழுவதும் வணக்கஸ்தலமாகவும் பரிசுத்தப்படுத்துவதாகவும் ஏற்படுத்தப்படல். முற்காலத்து நபிமார்கள் வணக்கத்திற்கென நிர்மாணிக்கப்பட்ட இடங்களிலேயே தொழுகை முதலிய வணக்கங்களை நிறைவேற்றினர். வேறு இடங்களில் அவற்றை நிறைவேற்ற அனுமதிக்கப்படவில்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மஸ்ஜிது, மஸ்ஜில்லாத

இடங்கள் யாவற்றிலும் தொழுகையை நிறைவேற்றி னார்கள். அவர்களின் வர்க்கத்தாராகிய முஸ்லிம்கள் உலகில் எங்கு சென்றாலும் தொழுகைக்கு நேரம் வந்து விட்டால் மஸ்ஜிதுகளிலோ அல்லது வீடுகளிலோ வியாபார இடங்களிலோ, திடல்களிலோ தோட்டங் களிலோ தொழுகையை நிறைவேற்றலாம். அந்த இடங்களில் மலம் சிறுநீர் போன்ற அசுத்ததங்கள் இருக்கலாகாது.

*(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 217 காண்க)*

புவி முழுவதும் பரிசுத்தமானது என்பது மட்டுமின்றி பரி சுத்தப்படுத்தக் கூடியதாகவும் இருக்கிறது. தொழுகைக்கு உளூச் செய்வது ஷர்த்து. உளூச் செய்து தன்னைச் சுத் தப்படுத்திக் கொள்ள வேண்டும். உளூ இல்லாமல் தொ ழக்கூடாது. அப்படித் தொழுதால், தொழுகை நிறைவே றாது. உளூச் செய்வதற்கு நீர் தேவை. நீர் சுத்தமானதாக இருப்பதுடன் வேறொன்றை சுத்தப்படுத்துவதாகவும் இருக்கிறது. நீர் இருக்கிற இதே தகுதியை அல்லாஹ் மண் ணுக்கும் அளித்து உளூச் செய்ய இயலாதவர்கள் தயம் மும் செய்யலாம். ஜனாபத் என்னும் பெருந்தொடக் குள்ளவர்கள் அதனை நீரால் அகற்ற இயலாதவர்களாகி விட்டால் குளிப்பதற்குப் பதிலாக மண்ணில் தயம்மும் செய்து சுத்தமாகலாம் என்று திருக்குர்ஆனில் அறிவித் துள்ளான். இதற்கு முன்னர் இருந்தவர்களுக்கு இந்தச் சலு கை அளிக்கப்படவில்லை.

*(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 216, 218, 218, 220 காண்க)*

மி:'ராஜு' இதற்கு முன்னர் இருந்த நபிமார்களுக்கு பூத உடலுடன் ஏற்படவில்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மட்டும்தான் பூதஉடலுடன் மி:'ராஜு' பயணம் சென்றார்கள். இதனைப் பற்றிய விபரம் எம்மால் எழுதப்பட்ட ஹளரத் முஹம்மது ரசூலுல்லாஹ் முதற்பாகத்திலும் இதர பல இடங்களிலும் எழுதப்பட்டிருக்கின்றன.

*(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ்-ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 221, 145 காண்க)*

ஜவாமிஉல்கலிம் (சகல விஷயங்களையும் பற்றி உபதேசித்தல்) இது திருக்குர்ஆன் தான் என்பதாக சிலர் கருதுகின்றனர். சகல விஷயங்களையும் பற்றி திருக்குர் ஆன் அறிவிக்கிறது என்பதை எவரும் ஆட்சேபிக்க வில்லை. அது வேதமாக இருப்பதுடன் அல்லாஹ்வின் வாக்காகவும் இருக்கிறது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உபதேசங்களாகிய ஹதீஸ்களும் சகல விஷயங்களையும் போதிக்கின்றன. உலக முன்னேற்றத்திற்கான விஷயங்களையும் ஆத்மார்த்த முன்னேற்றத்திற்கான ஞானங்களையும் அதில் காணலாம். ஆதலால், ஹதீஸ்களைப் பற்றித்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவித் திருப்பதாக பெரும்பாலர் கருதுகின்றனர். அதனைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

*(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1241 காண்க)*

# பொன்மொழிகள் தொகுக்கப்பட்ட வரலாறு

இஸ்லாம் மார்க்கம் லௌஹீகம், வைதீகம் ஆகிய இரண்டும் ஒருங்கே அமைந்ததால், திருவேதமாகிய திருக் குர்ஆனிலும், அதனை உபதேசித்த திருநபியின் போதனைகளிலும் மனிதனின் இம்மை மறுமை, இல்லறம், துறவரம், தேசியம், ராஜியம், வர்த்தகம், கைத் தொழில், லௌஹீகம், வைதீகம் ஆகிய சகல அம்சங்களும் அடங்கி இருக்கின்றன. அவை யாவற்றை யும் பற்றிய விளக்கங்களை ஹதீஸ் கிரந்தங்களில் காணலாம். அவர்களின் பொன்மொழிகள் காக்கப்பட்ட வரலாறு பற்றிய விளக்கங்களை அரபி நூல்களில் மட்டுமின்றி எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட ஜவாஹிருல் புகாரீ, தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ தமிழ் மொழி பெயர்ப்பு ஆகியவற்றிலும் விளக்கமாகக் காணலாம். இங்கு வாசர்களுக்கு அவற்றின் சாராம்சம் மிகமிகச் சுருக்கமாக தரப்படுகிறது.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் காலத்தில் திருக்குர்ஆன் அருளப்பட்டு கொண்டிருந்த தால், திருக்குர்ஆனை மட்டும் எழுதிக்கொள்ள அனுமதித்து தங்களுடைய உபதேசங்களாகிய ஹதீஸ் களை எழுதி வைக்க ஸஹாபிகளுக்குப் பொது அனுமதி வழங்கப்படவில்லை. சில குறிப்பிட்ட ஸஹாபிகளுக்கு மட்டும் பிரத்தியேக அனுமதி வழங்கப்பட்டிருந்தது.

வெளி இடத்து மன்னர்களுக்கும் தலைவர்களுக்கும் எழுதிய இஸ்லாமிய அழைப்பு நிருபங்கள், அரசு அலுவலர்களுக்கு நிர்வாகம் சம்பந்தமாகவும் பிரஜைகள் நடத்தப்பட வேண்டிய ஒழுங்குமுறை சம்பந்தமாகவும் அவ்வப்போது பிறப்பித்த உத்தரவுகள் ஆகியவை மட்டும் எழுத்தில் அமைந்திருந்தன.

அவர்களின் மறைவிற்குப்பின்னர் குலபாயே ராஷிதீன்கள் தங்கள் அரசு ஊழியர்களுக்கு உத்தரவுகளை அனுப்பும் போது ஹதீஸ்களில் சிலவற்றையும் எழுதி அனுப்புவதுண்டு. திருக்குர்ஆன் அருளப்படுகிற காலம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவுடன் முடிவடைந்து விட்டதால், ஹதீஸ்களை எழுதக்கூடாது என்றிருந்த பொதுத் தடையும் அகன்றது. ஆதலால், சில ஸஹாபிகள் தங்களுக்குப் பாடமாக இருந்த ஹதீஸ்களை எழுதி வைத்தனர். மற்றவர்கள் தங்களுக்கத் தெரிந்த ஹதீஸ்களை வாய்மொழியாக மற்றவர்களுக்கு அறிவித்தனர்.

(எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1937 காண்க)

இந்நிலையில் உமர் இப்னு அப்துல் அஜீஸ் (ரலி) கலிபா பதவியை ஏற்றபோது அபூபக்கரிப்னு ஹஜ்மினில் அன்ஸாரீ (ரஹ்) என்பவரை திருமதீனாவின் கவர்னராக நியமித்து, ஹதீஸ்களைச் சேகரிக்குமாறு கட்டளையிட்டார். இதுதான் அதிகாரப்பூர்வமாக ஹதீஸ்களை எழுதி வைப்பதற்காக எடுத்துக்கொள்ளப்

பட்ட முதல் முயற்சி. அவர் ஹதீஸ் ஓரளவு திரட்டினார். அதற்குள் ஹிஜ்ரீ 120ம் வருடத்தில் அவர் காலமாகிவிட்ட தால், அவருடைய முயற்சி முற்றுப் பெறவில்லை. அரசாங்கத் தடை ஏற்படுமோ என்றிருந்த அச்சம். அரசாங் கமே இதில் நேர்முகமாக ஈடுபட்டதன் மூலம் அகன்று விட்டதால், இப்னு ஹஸ்ம் (ரஹ்) அவர்கள் செய்த முயற் சியை ஆங்காங்கிருந்த சன்மார்க்க மேதைகள் பகிரங்க மாகத் தொடர்ந்து செய்தனர்.

ஹதீஸ்களை அத்தியாயங்களாகப் பிரித்து, நூதன மான முறையில் யாவருக்கும் எளிதில்புரியும் வண்ணம் முதன் முதலாக எழுதியவர் கூபாவில் வாழ்ந்த அபூபக்ர் இப்னு ஷைபா (ரஹ்) என்பவரே. இவரைப் பின் பற்றி வேறு பலரும் இதே முறையில் பல நூல்களை இயற்றினர். இவர்கள் யாவரும் மக்களின் வாய் மொழி யிலிருந்து செவியுற்றுத்தான் எழுதினர். ஆதலின், தங்களுக்கு அறிவிக்கப்பட்டவைகள் யாரால் அறிவிக்கப் பட்டன. அவருக்கு அறிவித்தவர் யார்? இவ்வாறாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வரையில் எவரெவர் செவியுற்றனர். அவர்களின் வரலாறுகள் பொய்த் தகவல்கள் தங்கள் நூல்களில் சேராமல் இருப்பதற்காக புது முயற்சியைச் செய்தனர்.

ஹதீஸ்களை அறிவித்த அவர்கள் நம்பத்தகுந்தவரா? உண்மையே பேசுபவரா? பொய்யுரைப்பவரா? என்ற விபரங்களை ஆராய்ந்தனர். அவற்றை அறிவதற்காக சில வழி முறைகளையும் கடைப்பிடித்தனர். பின்னர்,

அவர்களுக்குக் கிடைத்த தகவல் எழுத்து மூலம் வந்ததா? நேரில் சந்தித்து வாய்மொழியாகக் கேட்டுத் தெரிந்ததா? அல்லது முன்னர் எழுதி வைக்கப்பட்டிருந்த ஹதீஸ் நூலைப் பார்த்துப் படித்துக் கொள்ளுமாறு அனுமதி கொடுத்து அவ்வனுமதியை ஆதாரமாகக் கொண்டு புத்தகத்திலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டதா? என்ற விபரங்களைச் சேகரித்தனர். இவ்விதமாக படிப்படியாக பல விதிமுறைகள் ஏற்பட்டு இறுதியாக இது தனிப் பெருங்கலையாயிற்று. இச்சட்ட விதிகளைத் தழுவி ஆயிரக் கணக்கில் ஹதீஸ் கிரந்தங்களைப் பாதுகாத்தனர். அவ்வாறான நூல்களிலிருந்து அடியில் கண்ட சில ஹதீஸ்கள் வாசகர்களின் இம்மை மறுமைப் பயன் கருதி எழுதப்படுகின்றன.

# 101 ஹதீஸ்கள்

آيَةُ الْمُنَافِقِ ثَلَاثٌ: إِذَا حَدَّثَ كَذِبَ وَإِذَا وَعَدَ أَخْلَفَ وَإِذَا اؤْتُمِنَ خَانَ. متفق عليه.

1. நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்று 1.பேசினால் பொய்யுரைப்பான், 2.வாக்களித்தால் மாறு செய்வான், 3. அமானிதம் வைக்கப்பட்டால் மோசம் செய்வான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஹளரத் அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

اَبْغَضُ الْحَلَالِ إِلَى اللهِ الطَّلَاقُ.

2. அனுமதிக்கப்பட்டதில் அல்லாஹ்விற்கு மிகக் கோபமானது விவாகரத்தாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர் : ஹளரத் இப்னு உமர் (ரலி) நூல்: அபூதாவூத், இப்னு மாஜா

اِتَّقُوا اللهَ وَاعْدِلُوا فِي أَوْلَادِكُمْ.

3. அல்லாஹ்வை அஞ்சுங்கள்! உங்கள் மக்கள்

விஷயத்தில் நீதியாயிருங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர் : ஹளரத் அன்னுஃமானுப்னு புஷைர் (ரலி) நூல் : புகாரீ, முஸ்லிம்

اِتَّقُوا الظُّلْمَ فَإِنَّهُ ظُلُمَاتٌ يَوْمَ الْقِيَامَةِ وَاتَّقُوا الشُّحَّ فَإِنَّهُ أَهْلَكَ مَنْ كَانَ قَبْلَكُمْ

4. அநியாயத்தை அஞ்சுங்கள். அது இறுதிநாளின் இருள்கள். கஞ்சத்தனத்தை அஞ்சுங்கள். அது உங்களுக்கு முன்னர் இருந்தவர்களை அழித்துவிட்டது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர் : ஹளரத் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) நூல்: முஸ்லிம்

*(விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 703, 734, 1076, 1080,1086, 1701, 2118 காண்க)*

اِجْتَنِبُوا السَّبْعَ الْمُوبِقَاتِ الْمُهْلِكَاتِ الشِّرْكُ بِاللّٰهِ وَالسِّحْرُ وَقَتْلُ النَّفْسِ الَّتِي حَرَّمَ اللّٰهُ إِلَّا بِالْحَقِّ وَأَكْلُ الرِّبَا وَأَكْلُ مَالِ الْيَتِيمِ وَالتَّوَلِّي يَوْمَ الزَّحْفِ وَقَذْفُ الْمُحْصِنَاتِ الْغَافِلَاتِ.

5. அல்லாஹ்விற்கு இணை வைப்பது, சூனியம் செய்வது அல்லாஹ் கௌரவப்படுத்தி வைத்திருக்கிற ஜீவனை நியாயமின்றிக் கொலை செய்வது, வட்டியுண்பது, அநாதையின் பொருளைப் புசிப்பது, போரிடும் நாளில்

புறங்காட்டுவது, கற்புள்ள பெண்கள் மீது அவதூறு சொல்வது ஆகிய ஏழு நாச காரியங்களைத் தவிர்த்துக் கொள்ளுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர் : ஹளரத் அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1163 காண்க

أَحَبُّ الأَعْمَالِ إِلَى اللهِ أَدْوَمُهَا وَإِنْ قَلَّ.

6. செயல் (அமல்)களில் அல்லாஹ்விற்கு மிகப்பிரிய மானது அவற்றில் நிரந்தரமானதாகும். அது குறைவாக இருந்தாலும் சரியே என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 39, 587, 926, 933, 1774, 2019, 2020 காண்க.

أَحَبُّ النَّاسِ إِلَى اللهِ تَعَالَى يَوْمَ الْقِيَامَةِ وَأَدْنَاهُمْ مِنْهُ مَجْلِسًا إِمَامٌ عَادِلٌ. وَأَبْغَضُ النَّاسِ إِلَى اللهِ يَوْمَ الْقِيَامَةِ وَأَبْعَدُهُمْ مِنْهُ مَجْلِسًا إِمَامٌ جَائِرٌ.

7. இறுதி நாளில் அல்லாஹ்விற்கு மிகப் பிரியமான மனிதர்; இருக்கையால் அவனிடத்தில் மிக நெருக்கமானவர் நீதி மன்னர். இறுதி நாளில் அல்லாஹ்விற்கு மிகக் கோபமானவர்; இருக்கையால்

அவனுக்கு மிகத் தூரமானவர் அநீதி மன்னர் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூ ஸஈதினில் குத்ரீ (ரலி) நூல்: திர்மிதி

اَلْبِرُّ حُسْنُ الْخُلُقِ وَالإِثْمُ مَاحَاكَ فِي صَدْرِكَ وَكَرِهْتَ أَنْ يَطَّلِعَ عَلَيْهِ النَّاسُ.

8. நன்றி என்பது நற்குணம். பாவம் என்பது உன் உள்ளத்தைத் தைப்பதும் அதனை மக்கள் அறிந்து கொள்வதை நீ விரும்பாததுமாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அன்னவாஸுப்னு ஸம்ஆன் (ரலி) நூல்: முஸ்லிம்

إِذَا اسْتَأْذَنَتْ أَحَدَكُمْ امْرَأَتُهُ إِلَى الْمَسْجِدِ فَلاَ يَمْنَعُهَا.

9. உங்களில் ஒருவரிடத்தில் அவருடைய மனைவி மஸ்ஜிதுக்குச் செல்ல அனுமதி கோரினால் அவளை அவர் தடுக்க வேண்டாம் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: தம் தந்தை கூறியதாக ஸாலிம் (ரலி) நூல்: முஸ்லிம்

விரிவான விளக்கங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 118, 470 காண்க.

إِذَا الْتَقَى الْمُسْلِمَانِ بِسَيْفِهِمَا فَقَتَلَ أَحَدُهُمَا صَاحِبَهُ فَالْقَاتِلُ وَالْمَقْتُولُ فِي النَّارِ. قِيلَ يَا رَسُولَ اللهِ: هٰذَا الْقَاتِلُ فَمَا بَالُ الْمَقْتُولِ؟ قَالَ: إِنَّهُ كَانَ حَرِيصًا عَلَى قَتْلِ صَاحِبِهِ.

*10. இரண்டு முஸ்லிம்கள் தங்களுடைய வாளுடன் ஒருவரை ஒருவர் சந்தித்து, அவர்களின் ஒருவர் தன் தோழரைக் கொலை செய்து விடுவாராயின், கொலை செய்தவரும், கொல்லப்பட்டவரும் நரகிலிருப்பர். ''அல்லாஹ்வின் தூதரே! இவர்தான் கொலையாளி கொல்லப்பட்டவரின் காரியம் யாது'' என்று வினவப்பட்டது. அவர் தன் தோழரைக் கொல்ல (முயன்றார்) ஆசைப் பட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: அபூபக்ரா (ரலி) நூல்: முஸ்லிம்.

إِذَا أَمَّ أَحَدُكُمُ النَّاسَ فَلْيُخَفِّفْ فَإِنَّ فِيهِمُ الصَّغِيرَ وَالْكَبِيرَ الضَّعِيفَ وَالْمَرِيضَ وَذَا الْحَاجَةِ وَإِذَا صَلَّى بِنَفْسِهِ فَلْيُطَوِّلْ مَا شَاءَ.

*11. உங்களில் ஒருவர் மக்களுக்கு இமாமத்துச் செய் தால் சுருக்கிக்கொள்ள வேண்டும். அவர்களில் சிறியோரும் பெரியோரும் பலஹீனரும் நோயாளியும் அலுவலுள்ளோரும் இருப்பர். தனக்கு மட்டிலும் அவர் தொழுதால் (அதாவது இமாமாக இல்லாமல் தனியே*

தொழுதால்) நாடிய அளவு நீட்டிக் கொள்ளட்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 400 காண்க.

إِذَا تَقَاضَى إِلَيْكَ رَجُلَانِ فَلَا تَقْضِ لِلْأَوَّلِ حَتَّى تَسْمَعَ كَلَامَ الْآخَرِ فَسَوْفَ تَدْرِي كَيْفَ تَقْضِي.

12. உன்னிடத்தில் இருவர் பஞ்சாயத்திற்கு வந்தால், மற்றவரின் பேச்சைக் கேட்காமல் முதலாமவருக்குச் சாதகமாகத் தீர்ப்புச் செய்யாதே. (அவ்வாறு இருவரின் வாக்குமூலங்களையும் கேட்டால்) எப்படித் தீர்ப்புச் செய்வதென்பதை நிச்சயமாக நீ உணர்வாய் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அலீ (ரலி) நூல்: அஹ்மத், அபூதாவூத், திர்மிதீ

إِذَا حَكَمَ الْحَاكِمُ فَاجْتَهَدَ ثُمَّ أَصَابَ فَلَهُ أَجْرَانِ وَإِذَا حَكَمَ فَاجْتَهَدَ ثُمَّ أَخْطَأَ فَلَهُ أَجْرٌ.

13. ஒரு அதிகாரி பதவியேற்று நன்கு ஆராய்ந்து பின்னர் உத்தரவு பிறப்பித்து அதில் நேர்மையாக இருப்பின், அவருக்கு இரட்டைக் கூலி. அவர் நன்கு ஆராய்ந்து உத்தரவு பிறப்பித்து அதில் தவறிவிடுவாராயின் அவருக்கு ஒரு கூலி என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அம்ரு இப்னல் ஆஸ் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

إِذَا رَأَى أَحَدُكُمْ جَنَازَةً فَإِنْ لَمْ يَكُنْ مَاشِيًا مَعَهَا فَلْيَقُمْ حَتَّى يَخْلُفَهَا أَوْ تَخْلُفَهُ أَوْ تُوضَعَ مِنْ قَبْلِ أَنْ تَخْلُفَهُ.

*14. உங்களில் ஒருவர் பிரேதத்தைப் பார்த்து, அதனுடன் செல்பவராக அவர் இல்லாவிடில் அதனை அவர் கடக்கும் வரையில் அல்லது அவரை அது கடக்கும் வரையில் அல்லது அவரை அது கடப்பதற்கு முன்னர் (கீழே) வைக்கப்படும் வரையில் அவர் நிற்கவேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: ஆமிர் இப்னுல் ரபீஆ (ரலி) நூல்: புகாரீ

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 641, 642, 643 காண்க.*

إِذَا مَاتَ ابْنُ آدَمَ انْقَطَعَ عَنْهُ عَمَلُهُ إِلاَّ مِنْ ثَلاَثٍ صَدَقَةٍ جَارِيَةٍ أَوْ عِلْمٍ يُنْتَفَعُ بِهِ أَوْ وَلَدٍ صَالِحٍ يَدْعُو لَهُ.

*15. ஆதமுடைய மகன் மரணமடைந்துவிட்டால், நிரந்தரமான தர்மம், அல்லது பயன்படும் கல்வி, அல்லது அவனுக்காக துஆ செய்கிற பிள்ளை ஆகிய மூன்றைத் தவிர்த்து அவனுடைய (ஏனைய) அமல்கள் அறுந்துவிடுகின்றன என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம்.

أَرْبَعٌ مَنْ كُنَّ فِيهِ كَانَ مُنَافِقًا خَالِصًا،وَمَنْ كَانَتْ فِيهِ خَصْلَةٌمِنْهُنَّ كَانَتْ فِيهِ خَصْلَةٌ مِنَ النِّفَاقِ حَتَّى يَدَعَهَا: إِذَااؤْتُمِنَ خَانَ،وَإِذَاحَدَّثَ كَذَبَ،وَإِذَاعَاهَدَ غَدَرَ، وَإِذَاخَاصَمَ فَجَرَ

*16. நான்கு எவரிடத்திலிருக்கின்றனவோ, அவர் சுத்தமான (கலப்பற்ற) முனாபிக்காகிவிட்டார். அவற்றில் ஒரு தன்மை எவரிடமிருக்கிறதோ அதனை அவர் விடும் வரையில் அவரிடம் நிபாக்கின் ஒரு தன்மை இருக்கிறது. பேசினால் பொய்யுரைப்பார், அறுதிமானம் செய்தால் துரோகம் செய்வார் வாக்களித்தால் மாறு செய்வார், சச்சரவு செய்தால் பாவம் செய்வார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

اَلاَ أُنَبِّئُكُمْ بِأَكْبَرِ الْكَبَائِرِ الإِشْرَاكُ بِاللّٰهِ وَعُقُوقُ الْوَالِدَيْنِ وَقَوْلُ الزُّوْرِ.

*17. பெரும் பாவங்களில் மிகப் பெரியதை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அல்லாஹ்விற்கு இணை வைத்தல், பெற்றோர்களை புண்படுத்தல், பொய் சொல்லல் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அலீ (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

اَلإِحْسَانُ أنْ تَعْبُدَ اللّٰهَ كَأَنَّكَ تَرَاهُ فَإِنْ لَّمْ تَكُنْ تَرَاهُ فَإِنَّهُ يَرَاكَ.

*18. அல் இஹ்ஸான் (திருந்தச் செய்தல்) என்பதை அல்லாஹ்வை நீ பார்ப்பதுபோல் அவனை வணங்குதல். அவனை நீ பார்க்காவிடினும் உன்னை அவன் பார்க்கின்றான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

الأَرْوَاحُ جُنُوْدٌ مُجَنَّدَةٌ فَمَا تَعَارَفَ مِنْهَا اِئْتَلَفَ وَمَا تَنَاكَرَ مِنْهَا اِخْتَلَفَ.

*19. ஆன்மாக்கள் (ஆன்ம உலகில்) ஒன்று சேர்க்கப் பட்ட பட்டாளங்கள். அவற்றிலிருந்து ஒன்றை ஒன்று எது அறிந்ததோ அது (இவ்வுலகில் நட்புக் கொள்கிறது. அதில் அறியாதது (இவ்வுலகில்) பிணங்கிக் கொள்கிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புஹாரீ, முஸ்லிம்

إِنَّا لَنْ نَسْتَعْمِلَ عَلَى عَمَلِنَا مَنْ أَرَادَهُ.

*20. நம்முடைய காரியங்களில் வரிவசூல் அதிகாரியாக இருக்க விரும்புவரை அப்பணியில் நாம் நியமிக்கவே மாட்டோம் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூ மூஸா அல் அஷ்அரீ (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

أُنظُرُوْا إلى مَنْ هُوَ أسفَلَ مِنكُمْ وَلاَ تَنظُرُوْا إلى مَنْ هُوَ فَوْقَكُمْ فَهُوَ اَجْدَرُ أنْ لاَّ تَزْدَرُوا نِعْمَتَ اللهِ عَلَيْكُمْ.

*21. உங்களுக்குக் கீழ் உள்ளோரைக் கவனியுங்கள்; உங்களுக்கு மேலே உள்ளோரைக் கவனியாதீர்கள். அது உங்களுக்கு அல்லாஹ் அருளிய பாக்கியத்தை அலட்சியம் செய்யாதிருக்க மிகவும் தகுதியாகும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

إنَّ اللهَ حَرَّمَ عَلَيْكُمْ عُقُوْقَ الأمَّهَاتِ وَ وَأْدُ الْبَنَاتِ وَمَنْعًا وَهَاتِ وكَرِهَ لَكُمْ قِيْلَ وَقَالَ وكَثْرَةُ السُّؤَالِ وإضَاعَةَ الْمَالِ.

*22. தாய்மார்களை புண்படுத்துவதையும், புதல்வி களை உயிருடன் புதைப்பதையும், விலக்குவதையும், கொண்டு வருவதையும் உங்களுக்கு அல்லாஹ் ஹராமாக்கி இருக்கிறான். சொல்லப்பட்டது, சொன்னார் (அவர் சொன்னார் இவர் சொன்னார்) என்பதையும் மித மிஞ்சி வினவுவதையும், பொருளை நாசம் செய்வதையும் கொண்டு அல்லாஹ் அதிருப்தியடை கிறான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அல்முஙய்யரத்துப்னு ஷுஃபா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 673 காண்க.*

إِنَّ اللّٰهَ قَدْ حَرَّمَ عَلَى النَّارِ مَنْ قَالَ لاَ اِلٰهَ إِلاَّ اللّٰهُ يَبْتَغِي بِذٰلِكَ وَجْهَ اللّٰهِ.

*23. அல்லாஹ்வின் பொருத்தத்தை நாடியவராக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று கூறியவரை அல்லாஹ் நரகுக்கு ஹராமாக்கி இருக்கிறான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அத்பான் இப்னு மாலிக் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

إِنَّ الدُّعَاءَ هُوَ الْعِبَادَةُ.

*24. பிரார்த்தனை செய்வதே வணக்கம் தான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம், திர்மிதி, அபூதாவூத்

إِنَّ الدِّيْنَ يُسْرٌ وَلَنْ يُّشَادَّ الدِّيْنَ اَحَدٌ إِلاَّ غَلَبَهُ فَسَدِّدُوْا وَقَارِبُوْا وَابْشِرُوْا وَاسْتَعِيْنُوْا بِالْغَدْوَةِ وَالرَّوْحَةِ وَشَيْءٌ مِنَ الدُّلْجَةِ.

*25. சன்மார்க்கம் சுலபமானது அதனை கடுமையாக்கிய எவரையும் அது மிகைக்காமல் (விட) இல்லை. ஆகவே, நேர்மையாக இருங்கள். (அவனை நெருங்குங்கள், நற்செய்தி பெறுங்கள், காலையிலும்*

மாலையிலும் இருளில் சிறிது நேரமும் உதவி தேடுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 36 காண்க.

إِنَّ شَرَّ النَّاسِ عِنْدَ اللهِ مَنْزِلَةً يَوْمَ الْقِيَامَةِ الرَّجُلُ يُفْضِي إِلى امْرَأَتِهِ وَتُفْضِي إِلَيْهِ ثُمَّ يَنْشُرُ سِرَّهَا.

26. இறுதி நாளில் அல்லாஹ்விடத்தில் அந்தஸ்தால் கெட்ட மனிதன், தன்னுடைய மனைவியுடன் சேருகிறான் அவளும் அவனிடம் சேருகிறாள். பின்னர் அவளுடைய இரகசியத்தை வெளியிடுகிற ஆடவன் தான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூ ஸஈதினில் குத்ரி (ரலி) நூல்: முஸ்லிம்

إِنَّ شَرَّ النَّاسِ مَنْزِلَةً عِنْدَ اللهِ يَوْمَ الْقِيَامَةِ هُوَ مَنْ تَرَكَهُ النَّاسُ اِتِّقَاءَ فُحْشِهِ.

27. இறுதி நாளில் அல்லாஹ்விடத்தில் அந்தஸ்தால் கெட்ட மனிதர் அவனுடைய கெட்டவார்த்தைகளைத் தவிர்த்துக் கொள்வதற்காக அவனை மனிதர்கள் தள்ளி வைத்து விட்டார்களே (அவனிடம் போய் யார் பேசுவது என ஒதுங்குவது) அவர் தான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

إِنَّكُمْ سَتَحْرِصُوْنَ عَلَى الإِمَارَةِ وَسَتَكُوْنُ نَدَامَةً يَوْمَ الْقِيَامَةِ
فَنِعْمَةِ الْمُرْضِعَةُ وَبِئْسَةِ الْفَاطِمَةُ.

*28.விரைவில் நீங்கள் பதவிக்கு ஆசைப்படுவீர்கள். இறுதி நாளில் நிச்சயமாக அது கைசேதமாக இருக்கும். ஆகவே, பாலூட்டுவது நல்லதாயிற்று. பால் மறக்கடிப்பது கெட்டதாயிற்று (பதவி வகிக்காமல் இருப்பது சிறந்தது) என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரி

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 2115, 2056 காண்க*

إِنَّ الْمَيِّتَ لَيُعَذَّبُ بِبُكَاءِ الْحَيِّ.

*29. உயிருடனிருப்பவரின் அழுகையால் மரணமடைந்தவர் வேதனை செய்யப்படுகிறார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: உமர் (ரலி) நூல்: புகாரி, முஸ்லிம்

إِنَّمَا الأَعْمَالُ بِالنِّيَّاتِ وَإِنَّمَا لِكُلِّ امْرِءٍ مَا نَوٰى فَمَنْ كَانَتْ هِجْرَتُهُ إِلَى اللّٰهِ وَرَسُوْلِهِ فَهِجْرَتُهُ إِلَى اللّٰهِ وَرَسُوْلِهِ وَمَنْ كَانَتْ هِجْرَتُهُ إِلَى دُنْيَا يُصِيْبُهَا اَوْ اِمْرَئَةٍ يَنْكِحُهَا فَهِجْرَتُهُ إِلَى مَا هَاجَرَ إِلَيْهِ.

*30. செயல்கள் அனைத்தும் எண்ணத்தைப் பொருத்து இருக்கின்றன. ஒவ்வொரு மனிதனுக்கும்*

அவன் நிய்யத்துச் செய்ததுதான். எவருடைய ஹிஜ்ரத்து அல்லாஹ்வின்பாலும் அவனுடைய ரசூலின்பாலும் இருக்கிறதோ அவருடைய ஹிஜ்ரத்து அல்லாஹ்வின்பாலும் அவனது ரசூலின்பாலும் இருக்கின்றது. எவருடைய ஹிஜ்ரத் உலகின்பால் அதனை அடைய வேண்டுமென்று அல்லது பெண்ணின்பால் அதனை அடைய வேண்டும் என்று இருக்கிறாதோ அவருடைய ஹிஜ்ரத்து எதன்பால் அவர் ஹிஜ்ரத்துச் செய்தாரோ அதன்பாலிலேயே இருக்கிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: உமர் (ரலி) நூல்: முஸ்லிம்

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1, 2030 காண்க.

إِنَّمَا الطَّاعَةُ فِي الْمَعْرُوْفِ

31. கீழ்ப்படிதல் என்பது நல்லகாரியத்தில் தான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அலீ (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1630 காண்க.

إِنَّ مِمَّا أَدْرَكَ النَّاسُ مِنْ كَلَامِ النُّبُوَّةِ الْأُوْلَى إِذَا لَمْ تَسْتَحْ فَاصْنَعْ مَا شِئْتَ.

32. முந்தைய நபித்துவப் பேச்சிலிருந்து மக்கள் அடைந்தது, நீ வெட்கப்படாவிடில் விரும்பியதைச் செய்

என்பதாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரலி) நூல்: புகாரீ

إِنَّ مِنَ الشِّعْرِ لَحِكْمَةً.

33. நிச்சயமாக கவிதையில் விவேகமிருக்கிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: உபய்யுப்னு கஃப் (ரலி) நூல்: புகாரீ

اِنَّ الْمُؤْمِنَ لِلْمُؤْمِنِ كَالْبُنْيَانِ

34. கட்டடம் ஒன்றுக்கொன்று ஆதரவாக இருப்பது போல ஒரு மூமின் (விசுவாசி) ஒரு மூமினுக்கு இருக்கிறார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூ மூஸா (ரலி) நூல்: புகாரீ

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1984, 1986 காண்க.

إِنِّي لأَقُومُ فِي الصَّلاَةِ أُرِيدُ أَنْ أُطَوِّلَ فِيهَا فَأَسْمَعُ بُكَاءَ الصَّبِيِّ
فَأَتَجَوَّزُ فِي صَلاَتِي كَرَاهِيَةَ أَنْ أَشُقَّ عَلَى أُمِّهِ.

35. தொழுகையை நீட்ட வேண்டும் என்ற விருப் பத்துடன் அதில் நான் நிற்கிறேன். குழந்தைகளின் சப்தத்தை நான் கேட்டு என் தொழுகையை சுருக்கிக்

*கொள்கிறேன். அதனுடைய தாய்க்கு நான் கஷ்டம் கொடுப்பதை விரும்பாததற்காக என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: கத்தாதா (ரலி) நூல்: புகாரீ

إِيَّاكُمْ وَالْحَسَدَ فَإِنَّ الْحَسَدَ يَأْكُلُ الْحَسَنَاتِ كَمَا تَأْكُلُ النَّارُ الْحَطَبِ.

*36. பொறாமையை விட்டும் உங்களைக் காத்துக் கொள்ளுங்கள். ஏனெனில், நெருப்பு விறகைத் தின்பது போல, நன்மைகளை பொறாமை தின்று விடுகிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: அபூதாவூத், இப்னுமாஜா என்ற நூலில் அனஸ் (ரலி)

اَلإِيمَانُ أَنْ تُؤْمِنَ بِاللّٰهِ وَمَلاَئِكَتِهِ وَكُتُبِهِ وَبِلِقَائِهِ وَبِرُسُلِهِ وَتُؤْمِنَ بِالْبَعْثِ فِي الْيَوْمِ الآخِرِ.

*37. விசுவாசம் என்பது அல்லாஹ்வையும், அவனது வானவர்களையும், அவனது வேதத்தையும், அவனது சந்திப்பையும், அவனது தூதர்களையும் நீ விசுவாசிப்பதும், மறுமையில் உயிர்த்தெழும்புவதை நீ விசுவாசிப்பதும் ஆகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

الإِيْمَانُ بِضْعٌ وَسِتُّونَ شُعْبَةً وَالْحَيَاءُ شُعْبَةٌ مِّنَ الإِيْمَانِ

38. விசுவாசம் அறுபதுக்கும் அதிகமான கிளைகளுள்ளது. வெட்கம் ஈமானிலுள்ள ஒரு கிளையாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

بُنِيَ الإِسْلاَمُ عَلَى خَمْسٍ شَهَادَةُ أَنْ لَّا إِلَهَ إِلاَّ اللّٰهُ وَ أَنَّ مُحَمَّدًا رَسُوْلُ اللّٰهِ وَإِقَامُ الصَّلاَةِ وَإِيْتَاءُ الزَّكَاةِ وَالْحَجُّ وَصَوْمُ رَمَضَانَ.

39. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. முஹம்மது நபி (ஸல்) அல்லாஹ்வின் ரசூல் என்று சாட்சியம் கூறுதல், தொழுகையைக் கடைப்பிடித்தல், ஜக்காத்து என்னும் ஏழை வரியைக் கொடுத்தல், ஹஜ்ஜுச் செய்தல், ரமலான் நோன்பு நோற்றல் ஆகிய ஐந்தின் அடிப்படையில் இஸ்லாம் கட்டப்பட்டிருக்கிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) நூல்: புகாரீ

بِئْسَ الطَّعَامُ طَعَامُ الْوَلِيْمَةِ يُدْعٰى إِلَيْهِ الْأَغْنِيَاءُ وَيُتْرَكُ الْفُقَرَاءُ وَمَنْ تَرَكَ الدَّعْوَةَ فَقَدْ عَصَى اللّٰهَ وَرَسُوْلَهُ.

*40. விருந்தில் கெட்டது பணக்காரர் அழைக்கப்பட்டு ஏழைகளை விட்டு விடுகிற வலிமா உணவாகும். அழைப்பை விட்டுவிடுபவர் அல்லாஹ்விற்கும் அவனுடைய ரசூலுக்கும் மாறு செய்துவிட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

تَجِدُوْنَ مِنْ شَرِّ النَّاسِ عِنْدَ اللّٰهِ تَعَالٰى يَوْمَ الْقِيَامَةِ ذَا الْوَجْهَيْنِ الَّذِىْ يَأْتِي هٰؤُلَاءِ بِوَجْهٍ وَهٰؤُلَاءِ بِوَجْهٍ.

*41. இவர்களிடம் ஒரு முகத்திலும் அவர்களிடம் ஒரு முகத்திலும் வருகிற இரட்டை முகத்தானை (ஆளுக் கேற்றாற்போல் பேசுபவனை) இறுதி நாளில் அல்லாஹ் இடத்தில் கெட்ட மனிதனாக நீங்கள் காண்பீர்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி, நஸாயீ, இப்னுமாஜா

تَسَمَّوْا بِاسْمِي وَلَا تَكْتَنُوْا بِكُنْيَتِي وَمَنْ رَآنِي فِي الْمَنَامِ فَقَدْ رَآنِي فَإِنَّ الشَّيْطَانَ لَا يَتَمَثَّلُ فِي صُوْرَتِي وَمَنْ كَذَبَ عَلَيَّ مُتَعَمِّدًا فَلْيَتَبَوَّأْ مَقْعَدَهُ مِنَ النَّارِ.

*42. என்னுடைய பெயரைச் சூட்டுங்கள். ஆனால் என்னுடைய குன்னியத்தை நீங்கள் குன்னியத்தாகச் சூட்டாதீர்கள். என்னை கனவில் பார்த்தவர் என்னையே பார்த்தார். ஏனெனில், என் உருவத்தில் ஷைத்தான் தோன்றான். என்மீது எவர் வேண்டுமென்றே பொய்யுரைக்கிறாரோ அவர் நரகில் தன்னுடைய இருப்பிடத்திற்கு ஒதுங்கட்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

*(குன்னியத் என்றால் எந்தப் பெயரின் ஆரம்பத்தில் இப்னு என்றோ, அபூ என்றோ இருக்கிறதோ அப் பெயருக்கு "குன்னியத்து" என்று அரபியர் கூறுவர்.)*

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 90, 975, 1284, 2093, 2094 காண்க.*

تَهَادُوْا تَحَابُّوْا.

*43. ஒருவருக்கொருவர் அன்பளிப்புச் செய்து ஒருவரையொருவர் நேசியுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

ثَلاَثٌ لاَ يُكَلِّمُهُمُ اللهُ يَوْمَ الْقِيَامَةِ وَلاَ يُزَكِّيْهِمْ قَالَ أَبُوْ مُعَاوِيَةَ وَلاَ يَنْظُرُ إِلَيْهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيْمٌ: شَيْخٌ زَانٍ وَمَلِكٌ كَذَّابٌ وَعَائِلٌ مُسْتَكْبِرٌ.

44. விபச்சாரம் செய்யும் வயோதிகன், பொய்யுரைக்கும் மன்னன், பெருமையடிக்கும் தரித்திரன் ஆகிய மூவருடன் மறுமையில் அல்லாஹ் பேசவும் மாட்டான், அவர்களை சுத்தப்படுத்தவும்மாட்டான். அவர்களுக்கு நோவினை தரும் வேதனையுண்டு. (அவர்களை அவன் பார்க்கமாட்டான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் என்று அபூ முஆவியா (ரலி) கூறினார்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம்

حَقُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ سِتٌّ: إِذَا لَقِيْتَهُ فَسَلِّمْ عَلَيْهِ وَإِذَا دَعَاكَ فَأَجِبْهُ وَ إِذَا اسْتَنْصَحَكَ فَانْصَحْهُ وَ إِذَا عَطَسَ فَحَمِدَ اللهَ فَشَمِّتْهُ وَ إِذَا مَرِضَ فَعُدْهُ وَ إِذَا مَاتَ فَاتَّبِعْهُ.

45. ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஆறாகும். அவரை நீ சந்தித்தால் அவருக்கு சலாம் சொல். உன்னை அவர் அழைத்தால் அவருக்கு பதிலளி. உனக்கு அவர் உபதேசம் செய்தால் அவருக்கு நீ செவி சாய் (உன்னுடன் அவர்

உறவாடினால் அவருடன் உறவாடு) அவர் தும்மிவிட்டு அல்லாஹ்வைப் புகழ்ந்தால் அதற்குப் பதில் துஆ செய். அவர் நோயுற்றால் அவரிடம் சென்று விசாரி. அவர் இறந்தால் அவருடைய நல்லடக்கத்திற்கு செல் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம்

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 40 காண்க.

اَلْحَيَاءُ لاَ يَأْتِي إِلاَّ بِخَيْرٍ.

46. வெட்கம் நல்லதைத் தவிர (வேறு எதையும்) கொண்டு வராது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1992 காண்க.

اَلْحَيَاءُ مِنَ الإِيْمَانِ.

47. நாணம் ஈமானிலுள்ளது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

اَلْخَالَةُ بِمَنْزِلَةِ الأُمِّ.

48. தாயின் சகோதரி தாயின் அந்தஸ்திலிருக்கிறாள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அல்பராஉ இப்னு ஆஸிப் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

خُذِي مِنْ مَّالِهِ. مَا يَكْفِيكَ وَيَكْفِي بَنِيكَ قَالَهُ الِهِنْدُ بِنْتُ عُتْبَةَ امْرَأَةُ أَبِي سُفْيَانَ.

*49. அவருடைய பொருளிலிருந்து உனக்கும், உன் புதல்வர்களுக்கும் போதுமானதை நீ எடுத்துக் கொள்ளலாம். அபூ ஸுஃப்யானின் மனைவியும் உத்பாவின் புதல்வியுமான ஹிந்த் (ரலி) இடம் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1006 காண்க.*

خِيَارُكُمْ أَحَاسِنُكُمْ أَخْلاَقًا.

*50. உங்களில் நல்லவர் ஒழுக்கத்தால் உங்களில் அழகானவரே என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

دَخَلَتْ اِمْرَأَةُ النَّارَ فِيْ هِرَّةٍ رَبَطَتْهَا فَلَمْ تُطْعِمْهَا وَلَمْ تَدَعْهَا تَأْكُلُ مِنْ خَشَاشِ الأَرْضِ حَتّٰى مَاتَتْ خِشَاشُ الأَرْضِ هَوَامُهَا.

*51. ஒரு பூனைக்காக ஒரு பெண் நரகில் நுழைந்தாள். அதனை அவள் கட்டி வைத்தாள். அதற்கு உணவளிக்க வில்லை. பூமியிலுள்ள புழுப்பூச்சிகளைத் தின்று கொள்ளட்டும் என்று அதனை விடவுமில்லை.*

கடைசியாக அது இறந்தது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

விரிவான விபரங்கள்ளுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 412 காண்க.

اَلدِّيْنُ النَّصِيْحَةُ قَالُوْا لِمَنْ هِيَ يَارَسُوْلَ اللّٰهِ قَالَ: لِلّٰهِ وَلِكِتَابِهِ وَلِرَسُوْلِهِ وَلِأَئِمَّةِ الْمُسْلِمُوْنَ وَعَامَّتِهِمْ.

52. சன்மார்க்கம் என்பது விசுவாசம் (உள்ளப்பூர்வமாக நேசிப்பது) தான். யாரை? யா ரசூலல்லாஹ் என்று வினவினார். அல்லாஹ்வையும், அவனது வேதத்தையும், அவனது ரசூலையும், முஸ்லிம்களின் தலைவர்களையும், பொதுமக்களையும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: தமீமுத்தாரி (ரலி) நூல்: முஸ்லிம்

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 51 காண்க.

السَّاعِيْ عَلَى الْأَرْمَلَتِ وَالْمِسْكِيْنِ كَالْمُجَاهِدِ فِيْ سَبِيْلِ اللّٰهِ أَوِ الْقَائِمِ اللَّيْلِ اَلصَّائِمِ النَّهَارِ.

53. விதவைகளுக்காகவும், ஏழைகளுக்காகவும் பாடுபடுபவர் அல்லாஹ்வின் பாதையில் போரிடுபவர் அல்லது பகலில் நோன்பு நோற்று இரவில் வணங்கு

*பவரைப் போன்றவராவார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

سِبَابُ الْمُسْلِمِ فُسُوقٌ وَقِتَالُهُ كُفْرٌ.

*54. முஸ்லிமை ஏசுவது பிஸ்க் (அக்கிரமம்) அவரைக் கொலை செய்வது குப்று என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

اَلسَّخِيُّ قَرِيبٌ مِّنَ اللهِ قَرِيبٌ مِّنَ النَّاسِ قَرِيبٌ مِّنَ الْجَنَّةِ
بَعِيدٌ مِّنَ النَّارِ وَالْبَخِيلُ بَعِيدٌ مِّنَ اللهِ بَعِيدٌ مِّنَ النَّاسِ قَرِيبٌ
مِّنَ النَّارِ وَالْجَاهِلُ سَخِيٌّ اَحَبُّ إِلَى اللهِ مِنْ عَابِدٍ بَخِيلٍ.

*55. தர்மம் செய்பவர் அல்லாஹ்விற்கு சமீபத்தில் இருக்கிறார்; மக்களுக்குச் சமீபத்திலிருக்கிறார். சுவர்க்கத் திற்குச் சமீபத்திலிருக்கிறார். நரகிற்குத் தூரத்திலிருக்கிறார். கஞ்சன் அல்லாஹ்விற்கு தூரத்திலிருக்கிறார், மக்களுக்கு தூரத்திலிருக்கிறார். தர்மம் செய்யும் அறியாமைக்காரன் வணங்கும் கஞ்சனைப் பார்க்கினும் அல்லாஹ்விற்கு மிகப் பிரியமானவன் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: திர்மிதி

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1704 காண்க.*

اَلسَّمْعُ وَالطَّاعَةُ حَقٌّ مَالَمْ يُؤْمَرْ بِمَعْصِيَةٍ فَإِذَا أُمِرَ بِمَعْصِيَةٍ فَلاَ سَمْعَ وَلاَ طَاعَةَ.

56. செவியுறுவதும் கீழ்ப்படிவதும் பாவத்தைக் கொண்டு ஏவப்படாமலிருக்கும் காலமெல்லாம் கடமையாகும். பாவத்தைக் கொண்டு ஏவப்பட்டால், செவியேற்பதுமில்லை கீழ்ப்படிவதுமில்லை என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) நூல்: புகாரீ

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1630 காண்க.

اَلْعَائِدُ فِيْ هِبَتِهِ كَالْكَلْبِ يَقِيءُ ثُمَّ يَعُوْدُ فِيْ قَيْئِهِ.

57. தன்னுடைய நன்கொடையை திரும்பப் பெறுபவர் நாயைப் போன்றவராவார். அது கக்கிவிட்டு மீண்டும் தன்னுடைய வாந்தியில் புசிக்கும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

عَلَيْكُمْ بَالصِّدْقِ فَإِنَّ الصِّدْقَ يَهْدِيْ إِلَى الْبِرِّ فَإِنَّ الْبِرَّ يَهْدِيْ إِلَى الْجَنَّةِ وَمَا يَزَالُ الرَّجُلُ يَصْدُقُ وَيَتَحَرَّى الصِّدْقَ حَتّٰى يُكْتَبَ عِنْدَ اللهِ صِدِّيْقًا وَإِيَّاكُمْ وَالْكِذْبُ فَإِنَّ الْكِذْبَ يَهْدِيْ إِلَى الْفُجُوْرِ فَإِنَّ الْفُجُوْرَ يَهْدِيْ إِلَى النَّارِ. وَمَا يَزَالُ الرَّجُلُ يَكْذِبُ وَيَتَحَرَّى الْكِذْبَ حَتّٰى يُكْتَبَ عِنْدَ اللهِ كَذَّابًا.

58. உண்மையைப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள்.

நல்லவற்றின் பால் சேர்க்கும். நல்லவை சுவர்க்கத்தின் பால் சேர்க்கும். இறுதியாக அல்லாஹ்விடத்தில் உண்மை யாளன் என்று எழுதப்படுவான். மனிதன் உண்மை யுரைத்துக் கொண்டும் உண்மையைத் துருவிக் கொண்டுமே இருப்பானாக. பொய்யைவிட்டு உங்களைக் காத்துக் கொள்ளுங்கள். பொய் பாவத் தின்பால் சேர்க்கும், பாவம் நரகின்பால் சேர்க்கும். மனிதன் பொய்யுரைத்துக் கொண்டு பொய்யைத் துருவிக் கொண்டும் இருப்பான். இறுதியாக அல்லாஹ்விடத்தில் பொய்யன் என்றெழுதப்படுவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு மஸ்வூத் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

قَدْ اَذِنَ اللّٰهُ لِكَيْ اَنْ تَخْرُجْنَ لِحَوَاجِكُنَّ.

59. (பெண்களே) உங்களுடைய தேவைகளுக்காக நீங்கள் வெளியில் செல்ல உங்களுக்கு அல்லாஹ் அனுமதி கொடுத்திருக்கிறான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரலி) நூல்: புகாரீ
விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1717 காண்க.

كُلُّ شَرَابٍ اَسْكَرَ فَهُوَ حَرَامٌ.

60. போதையை ஏற்படுத்தும் சகல பானமும்

*விலக்கப்பட்டிருக்கிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி, நஸாயீ, இப்னுமாஜா

كُلُّكُمْ رَاعٍ وَكُلُّكُمْ مَسْئُوْلٌ عَنْ رَعِيَّتِهِ. اَلإِمَامُ رَاعٍ وَمَسْئُوْلٌ عَنْ رَعِيَّتِهِ وَالرَّجُلُ رَاعٍ فِيْ أَهْلِهِ وَهُوَ مَسْئُوْلٌ عَنْ رَعِيَّتِهِ وَالْمَرْآةُ فِيْ بَيْتِ زَوْجِهَا رَاعِيَةٌ وَهِيَ مَسْئُوْلَةٌ عَنْ رَعِيَّتِهَا وَالْخَادِمُ فِيْ مَالِ سَيِّدِهِ رَاعٍ وَهُوَ مَسْئُوْلٌ عَنْ رَعِيَّتِهِ.

*61. உங்களில் ஒவ்வொருவரும் மேய்ப்பர் (கவனிப் பாளர் பாதுகாவலர்) மேய்ப்பாளர் ஒவ்வொருவரும் தன் பாதுகாப்பிலுள்ளதைப் பற்றி வினவப்படுவார். பெண் தன் கணவனின் இல்லத்தின் காவலாளி. தன் பாதுகாப் பிலுள்ளதைப் பற்றி அவள் வினவப்படுவாள். பணியாளன் தன் எஜமானனின் பொருளுக்குக் காவ லாளி. தன் பாதுகாப்பிலுள்ளதைப் பற்றி அவன் வினவப் படுவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம், அபூ தாவூத், திர்மிதி, நஸாயி

كُلُّ مُسْكِرٍ خَمْرٌ وَكُلُّ مُسْكِرٍ حَرَامٌ.

*62. போதையை ஏற்படுத்தும் யாவும் கம்ர் (சாராயம்) போதையை ஏற்படுத்தும் யாவும் விலக்கப்பட்டது.*

(ஹராம்) என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) நூல்: முஸ்லிம்

كُلُّ مَعْرُوفٍ صَدَقَةٌ.

63. நல்லது ஒவ்வொன்றும் தர்மம் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) நூல்: புகாரீ

لاَ تَرْغَبُوا عَنْ آبَائِكُمْ فَمَنْ رَغِبَ عَنْ أَبِيهِ فَهُوَ كُفْرٌ.

64. உங்கள் தந்தையரைப் புறக்கணிக்காதீர்கள். தன் தந்தையை எவர் புறக்கணிக்கிறாரோ, அவர் குப்று (மாறு செய்பவர் நன்றி மறப்பவர்) என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம்

لاَ تَسُبُّوا الأَمْوَاتَ فَإِنَّهُمْ قَدْ أَفْضَوْا إِلَى مَا قَدَّمُوا.

65. மரணமடைந்தவர்களைத் திட்டாதீர்கள். அவர்கள் தாங்கள் முற்படுத்தி வைத்ததின் பால் சென்று விட்டனர் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரலி) நூல்: புகாரீ

لاَ تَمْنَعُوا النِّسَاءَ الْمَسَاجِدَ إِذَا اسْتَأْذَنَّكُمْ إِلَيْهَا.

66. மஸ்ஜிதுக்குச் செல்ல உங்களிடத்தில் பெண்கள் அனுமதி கோரினால் அவர்களை நீங்கள் தடுக்காதீர்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அப்துல்லாஹிப்னு உமர் (ரலி) நூல்: முஸ்லிம்
விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 470 காண்க.

لاَ حَسَدَ إِلاَّ فِي اِثْنَيْنِ رَجُلٌ آتَاهُ اللَّهُ مَالاً فَسَلَّطَهُ عَلَى هَلَكَتِهِ فِي الْحَقِّ وَرَجُلٌ آتَاهُ الْحِكْمَةَ فَهُوَ يَقْضِي بِهَا وَيُعَلِّمُهَا.

67. இரண்டில் அல்லாமல் போட்டி இல்லை. ஒருவர், அவருக்கு அல்லாஹ் பொருளைக் கொடுத்தான். சத்தியத்தில் செலவிட்டு விட்டார். இன்னும் ஒருவர், அவருக்கு அல்லாஹ் அறிவைக் கொடுத்திருக்கிறான். அதனைக் கொண்டு அவர் தீர்ப்பளிக்கிறார் இன்னும் அதனைக் கற்பிக்கிறார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) நூல்: புகாரீ
விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1764 காண்க.

لاَ يَحْكُمُ أَحَدٌ بَيْنَ اِثْنَيْنِ وَهُوَ غَضْبَانٌ.

68. கோபமாக இருக்கையில் எவரும் இருவருக்கிடையில் தீர்ப்புச் செய்யக்கூடாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூபக்கர் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 2119 காண்க.*

لاَيَحِلُّ دَمُ اِمْرَإٍ مُسْلِمٍ يَشْهَدُ اَنْ لاَّاِلَهَ اِلاَّ اللهُ وَ أَنِّيْ رَسُوْلُ اللهِ اِلاَّ بِاِحْدٰى ثَلاَثٍ اَلثَّيِّبُ الزَّانِيْ وَالنَّفْسُ بِالنَّفْسِ وَالتَّارِكُ لِدِيْنِهِ الْمُفَارِقُ لِلْجَمَاعَةِ.

69. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்றும், நான் அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சியம் கூறுகிற எந்த முஸ்லிமுடைய உதிரமும் எந்த முஸ்லிமான மனிதனுக்கும் ஹலால் இல்லை. திருமணம் செய்த விபச்சாரன், உயிருக்கு உயிர், தன் சன்மார்க்கத்தைத் துறந்தவன் (இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவிய பிறகு மதம் மாறியவன் முஸ்லிம்களின் படையணிக்) கூட்டத்தை விட்டுப் பிரிந்(து எதிரிகளுடன் சேர்ந்)வன் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: இப்னு மஸ்வூத் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 2073 காண்க.*

لاَ يَحِلُّ لِرَجُلٍ مُسْلِمٍ أنْ يُّعْطِي العَطِيَّةَ ثُمَّ يَرْجِعَ فِيْهَا إلاَّ الْوَالِدَ فِيْمَا يُعْطِي لِوَلَدِهِ.

70. தந்தை தன் புதல்வருக்குக் கொடுத்ததைத் தவிர வேறு எந்த முஸ்லிமும் தான் கொடுத்த கொடையை திரும்பப் பெறுவது ஹலால் இல்லை என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: இப்னு உமர், இப்னு அப்பாஸ் (ரலி) நூல்: அஹ்மத், புகாரீ, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1133 காண்க.

لاَ يَخْلُوَنَّ رَجُلٌ بِامْرَأَةٍ إلاَّ مَعَ ذِي مَحْرَمٍ.

71. (திருமணம் செய்ய) விலக்கலுள்ளவரைத் தவிர எந்தப் பெண்ணுடனும் ஆடவன் தனித்திருக்கக்கூடாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் (ரலி) நூல்: புகாரீ

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 559 காண்க.

لاَ يَدْخُلُ الْجَنَّةَ مَنْ كَانَ فِي قَلْبِهِ مِثْقَالُ ذَرَّةٍ مِنْ كِبْرٍ.

72. தன்னுடைய இருதயத்தில் அணுவளவு தற் பெருமையுள்ளவர் சுவர்க்கம் செல்லமாட்டார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) நூல்: முஸ்லிம்

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 2175 காண்க.

لاَ يَدْخُلُ الْجَنَّةَ قَتَّاتٌ أي نَمَّامٌ.

*73. கோள் சொல்பவர் சுவர்க்கம் செல்லமாட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: ஹுதைபத்துப்னுல் யமான் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

لاَ يَرِثُ الْمُسْلِمُ الْكَافِرَ وَلاَ يَرِثُ الْكَافِرُ الْمُسْلِمَ.

*74. முஸ்லிம் காபிருக்கு வாரிசாகமாட்டார். முஸ்லிமுக்கு காபிர் வாரிசாகமாட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: உசாமா இப்னு ஜைத் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

لاَ يَرْحَمُ اللهُ مَنْ لاَّ يَرْحَمُ النَّاسَ.

*75. மனிதர்களுக்கு இரக்கம் காட்டாதவரிடம் அல்லாஹ்வும் இரக்கம் காட்டமாட்டான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: ஜுரைர் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம், திர்மிதி

لاَيَزْنِي الزَّانِيْ حِيْنَ يَزْنِيْ وَهُوَ مُؤْمِنٌ وَلاَ يَسْرِقُ السَّارِقُ حِيْنَ يَسْرِقُ وَهُوَ مُؤْمِنٌ وَلاَ يَشْرَبُ الشَّارِبُ الْخَمْرَ حِيْنَ يَشْرَبُهَا وَهُوَ مُؤْمِنٌ.

*76. விபச்சாரம் செய்பவர் விபச்சாரம் செய்யும்போது விசுவாசியாக இருந்து கொண்டு விபச்சாரம் செய்ய மாட்டார். திருடுபவர் திருடும் நேரத்தில் விசுவாசியாக*

இருந்து கொண்டு திருடமாட்டார். குடிப்பவர் மது குடிக்கும் நேரத்தில் விசுவாசியாக இருந்து கொண்டு அதனை குடிக்கமாட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம்

لَا يُلْدَغُ الْمُؤْمِنُ مِنْ جُحْرٍ وَاحِدٍ مَرَّتَيْنِ.

77. ஒரு முஃமின் ஒரே துவாரத்தில் இருமுறை கொட்டப்படமாட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரி

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 1994 காண்க.*

لَا يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى يُحِبَّ لِأَخِيهِ مَا يُحِبُّ لِنَفْسِهِ.

78. தனக்குப் பிரியப்படுவதையே தன் சகோதரனுக்கும் பிரியப்படாத வரை உங்களில் எவரும் (முழுமையான) விசுவாசியாகமாட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அனஸ் (ரலி) நூல்: புகாரி

لَمْ يَبْقَ مِنَ النُّبُوَّةِ إِلاَّ الْمُبَشِّرَاتِ قَالُوْا وَمَا الْمُبَشِّرَاتُ قَالَ: الرُّؤْيَةُ الصَّالِحَةُ.

79. நற்செய்திகளைத் தவிர நபித்துவத்தில் (எதுவும்) மிஞ்சவில்லை. நற்செய்திகள் என்றால் என்ன என்று அவர்கள் (சஹாபாக்கள்) வினவினர். நல்ல கனவுகள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹிர் புகாரீ ஹதீஸ் எண் 2090, 2092, 2096, 2097 காண்க.

لَيْسَ الشَّدِيْدُ بَالصُّرَعَةِ إِنَّمَا الشَّدِيْدُ الَّذِي يَمْلِكُ نَفْسَهُ عِنْدَ الْغَضَبِ.

80. பலவான் என்பது மல்யுத்தத்தைக் கொண்டல்ல. பலவான் என்பதெல்லாம் கோபமுற்ற நேரத்தில் தன்னைக் கட்டுப்படுத்துகிறவர் தான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

لَيْسَ الْكَذَّابُ الَّذِي يُصْلِحُ بَيْنَ النَّاسِ فَيَنْمِي خَيْرًا أَوْ يَقُوْلُ خَيْرًا.

81. மக்களுக்கிடையில் சமாதானம் செய்து வைப்பவர் பொய்யரல்லர். அவர் நல்லதை வளர்க்

கிறார் அல்லது நல்லதைச் சொல்கிறார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அக்பாவின் புதல்வி உம்மு குல்தூம் (ரலி) நூல்: புகாரீ

لِيُسَلِّمُ الصَّغِيرُ الْكَبِيرَ وَالْمَارُّ عَلَى الْقَاعِدِ وَالْقَلِيلُ عَلَى الْكَثِيرِ. وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ: وَالرَّاكِبُ عَلَى الْمَاشِي.

82. சிறியவர் பெரியவருக்கும், செல்பவர் உட்கார்ந்து இருப்பவருக்கும், கொஞ்சமாக இருப்போர் அதிகமாக இருப்போருக்கும் சிறுகூட்டத்தார் பெருங்கூட்டத்தாருக்கும் ஸலாம் சொல்ல வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

முஸ்லிமிலுள்ள மற்றொரு அறிவிப்பில் வாகனத்திலிருப்பவர் நடப்பவருக்கு (ஸலாம் சொல்ல வேண்டும்) என்றுமிருக்கிறது.

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 2007 காண்க.

لَيْسَ الْمِسْكِيْنُ الَّذِيْ يَطُوْفُ عَلَى النَّاسِ تَرُدُّهُ اللُّقْمَةُ وَاللُّقْمَتَانِ وَالتَّمْرَةُ وَالتَّمْرَتَانِ وَلٰكِنَّ الْمِسْكِيْنَ الَّذِيْ لاَ يَجِدُ غِنًى يُغْنِيْهِ وَلاَ يُفْطِنُ لَهُ فَيُتَصَدَّقُ عَلَيْهِ وَلاَ يَقُوْمُ فَيَسْأَلُ النَّاسَ.

83. தனக்கு ஒரு கவளம் இரண்டு கவளங்கள், ஒரு பேரீத்தம்பழம் இரண்டு பேரீத்தம்பழங்கள், கொடுக்கப்படுவதற்காக மக்களிடம் சுற்றுபவர் ஏழையல்லர். எனினும், ஏழை என்பவர் தன்னை தேவையில்லாமல் செய்கிற சீமான் தனத்தைப் பெற்றுக் கொள்ளாமலும், தான் (தேவையுள்ளவர் என்பது) உணரப்பட்டு தனக்கு தர்மங்கொடுக்கப்படாமல் உள்ள நிலையில் எழுந்து சென்று மக்களிடத்தில் கேட்காமலும் இருப்பவர் தான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1677 காண்க.

لَيْسَ مِنَّا مَنْ ضَرَبَ الْخُدُوْدَ اَوْشَقَّ الْجُيُوْبَ اَوْدَعٰى بِدَعْوَى الْجَاهِلِيَّةِ.

84. இறந்தவருக்காக அல்லது கஷ்டம் வந்ததற்காக) சென்னிகளில் அடித்துக் கொள்பவர் அல்லது சட்டைக் கழுத்துக்களைக் கிழித்துக் கொள்பவர் அல்லது

அஞ்ஞான காலத்து பிரார்த்தனையைப் பிரார்த்திப்பவர் நம்மைச் சார்ந்தவரல்லர் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: மஸ்ரூக் அறிவித்ததாக அப்துல்லாஹ் இப்னு முர்ரா தெரிவித்தார் என்று அஃமஷும், அப்துல்லாஹ்வும் (ரலி) நூல்: முஸ்லிம், புகாரீ

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 630, 632, 633, 1180, 1740 காண்க.

مَا مِنْ اَمِيْرٍ يَلِيْ اَمْرَ الْمُسْلِمِيْنَ ثُمَّ لاَ يَجْهَدُ لَهُمْ وَيَنْصَحُ إلاَّ لَمْ يَدْخُلْ مَعَهُمُ الْجَنَّةَ.

85. அமீர் (அதிபர்) முஸ்லிம்களின் காரியத்திற்கு அதிகாரியாகி பின்னர் அவர்களுக்காக (உழைப்பதற்கு) மறுக்காமல் உள்ளப்பூர்வமாக உழைப்பாராயின் அவர்களுடன் அவரும் சுவர்க்கத்தில் நுழைவார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: மஃகலுப்னு யஸார் (ரலி) நூல்: முஸ்லிம்

مَامِنْ عَبْدٍ يَسْتَرْعِيْهِ اللّٰهُ رَعِيَّةً يَمُوْتُ يَوْمَ يَمُوْتُ وَهُوَ غَاشٌّ لِرَعِيَّتِهِ إلاَّ حَرَّمَ اللّٰهُ عَلَيْهِ الْجَنَّةَ.

86. மக்களில் சிலரை நிர்வகிக்கும் பொறுப்பை அல்லாஹ் ஓர் அடியானுக்கு வழங்கி, அவர் அம்மக்களை ஏமாற்றி மோசடி செய்த நிலையில் இறந்துவிட்டால் அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தை தடை செய்து

விட்டான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: மஃகல் (ரலி) நூல்:

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழிபெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 2117 காண்க.

مَا مِنْ مَوْلُوْدٍ إِلاَّ يُوْلَدُ عَلَى الْفِطْرَةِ اِلسْلاَمَ

فَأَبَوَاهُ يُهَوِّدَانِهِ أَوْ يُنَصِّرَانِهِ أَوْ يُمَجِّسَانِهِ

87. பிறக்கிற குழந்தை இஸ்லாத்தின் இயற்கையில்லாமல் பிறப்பதில்லை. அதனுடைய பெற்றோர்கள் அதனை யூதராக்குகின்றனர் அல்லது கிறிஸ்துவராக்குகின்றனர் அல்லது மஜூஸியாக்குகின்றனர் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: ஹளரத் அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 656 காண்க.

اَلْمُسْلِمُ مَنْ سَلِمَ الْمُسْلِمُوْنَ مِنْ لِسَانِهِ وَيَدِهِ وَالْمُهَاجِرُ مَنْ

هَجَرَ مَا نَهَى اللّٰهُ عَنْهُ.

88. யாருடைய நாவையும் கையையும் விட்டு (ஏனைய) முஸ்லிம்கள் பாதுகாப்பாக இருக்கின்றார்களோ அவர்தான் (பரிபூரணமான) முஸ்லிம் ஆவார். முஹாஜிர் என்பவர் அல்லாஹ் விலக்கியதைத் துறந்தவர் தான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இன்னு உமர் (ரலி) நூல்: புகாரீ

مَنْ سَرَّهُ أَنْ يُبْسَطَ لَهُ فِي رِزْقِهِ وَأَنْ يُنْسَأَ فِي أَثَرِهِ فَلْيَصِلْ رَحِمَهُ

*89. தனக்கு செல்வம் விரிவாக்கப்படவேண்டும், தனக்குப் பின்னர் ஞாபகிக்கப்பட வேண்டும் என்பதை விரும்புபவர் தன் உறவினர்களை ஆதரிக்கட்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 956 காண்க.*

مَنْ بَدَّلَ دِينَهُ فَاقْتُلُوهُ.

*90. தன்னுடைய சன்மார்க்கத்தை எவர் மாற்றினாரோ அவரைக் கொல்லுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் (ரலி) நூல்: புகாரீ

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 2085 காண்க.*

مِنْ حُسْنِ إِسْلَامِ الْمَرْءِ تَرْكُهُ مَالَا يَعْنِيهِ.

*91. தனக்கு தேவையற்றதை விட்டுவிடுவது இஸ்லாமியப் பண்புகளில் ஒன்றாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: திர்மிதி

مَنْ حَمَلَ عَلَيْنَا السِّلاَحَ فَلَيْسَ مِنَّا.

92. நமக்கு எதிராக ஆயுதந்தாங்கியவர் நம்மைச் சார்ந்தவரல்லர் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: இப்னு உமர் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

مَنْ قَتَلَ نَفْسَهُ بِحَدِيْدَةٍ فَحَدِيْدَتُهُ فِي يَدِهِ يَتَوَجَّؤُ بِهَا فِي بَطْنِهِ فِي نَارِ جَهَنَّمَ خَالِدًا مُّخَلَّدًا فِيْهَا أَبَدًا وَمَنْ شَرِبَ سَمًّا فَقَتَلَ نَفْسَهُ فَهُوَ يَتَحَسَّاهُ فِي نَارِ جَهَنَّمَ خَالِدًا مُّخَلَّدًا فِيهَا أَبَدًا وَمَنْ تَرَدَّى مِنْ جَبَلٍ فَقَتَلَ نَفْسَهُ فَهُوَ يَتَرَدَّى فِي نَارِ جَهَنَّمَ خَالِدًا مُّخَلَّدًا فِيْهَا أَبَدًا.

93. தன்னை ஆயுதத்தால் (தற்)கொலைசெய்து கொண்டவர்: அவரின் ஆயுதத்தைக் கையில் வைத்து அதனால் தன்னை வயிற்றில் குத்திக் கொண்டு நரக நெருப்பில் எந்நாளும் நிரந்தரமாக வேதனை செய்யப் படுவார். விஷத்தைச் சாப்பிட்டு தற்கொலை செய்து கொண்டவர் அதனைக் குடித்துக் கொண்டு நரக நெருப்பில் எந்நாளும் நிரந்தரமாக வேதனை செய்யப்படுவார். மலையிலிருந்து விழுந்து தற்கொலை செய்தவர் நரக நெருப்பில் விழுந்து, நிரந்தரமாக வேதனை செய்யப் படுவார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்:அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம்

விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1979 காண்க.

مَنْ كَانَتْ لَهُ امْرَأَتَانِ فَمَالَ إِلَى احْدَاهُمَا دُونَ الأُخْرَى جَاءَ يَوْمَ الْقِيَامَةِ وَشِقُّهُ مَائِلٌ.

*94. எவருக்கும் இரண்டு மனைவியர் இருந்து ஒருத்தியின்பால் சார்ந்துவிடுகிறாரோ அவருடைய ஒரு பகுதியில் சார்ந்தவராக இறுதி நாளில் வருவார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ, அஹ்மத், முஸ்லிம், அபூதாவூத், திர்மிதீ

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 1716, 144, 383, காண்க.*

مَنْ كَانَ يُؤْمِنُ بِاللهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيَقُلْ خَيْرًا أَو لِيَصْمُتْ وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيُكْرِمْ جَارَهُ وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاللهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ.

*95. எவர் அல்லாஹ்வையும் கடைசி நாளையும் விசுவாசிப்பவராக இருக்கிராரோ அவர் நல்லதைச் சொல்லவேண்டும் அல்லது மௌனமாக இருக்க வேண்டும். எவர் அல்லாஹ்வையும் கடைசி நாளையும் விசுவாசிக்கிறாரோ அவர் தன் அண்டை வீட்டுக்காரரை கண்ணிப்படுத்த வேண்டும். எவர் அல்லாஹ்வையும் கடைசி நாளையும் விசுவாசித்தவராக இருக்கிறாரோ அவர் தன் விருந்தினரை கண்ணிப்படுத்தட்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பாளர்:அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம்

مَنْ نَفَّسَ عَنْ مُسْلِمٍ كُرْبَةً مِّنْ كُرَبِ الدُّنْيَا نَفَّسَ اللّٰهُ عَنْهُ كُرْبَةً مِنْ كُرَبِ يَوْمِ الْقِيَامَةِ. وَمَنْ يَسَّرَ عَلٰى مُعْسِرٍ يَسَّرَ اللّٰهُ عَلَيْهِ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ وَمَنْ سَتَرَ مُسْلِمًا سَتَرَهُ اللّٰهُ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ وَاللّٰهُ فِي عَوْنِ الْعَبْدِ مَا كَانَ الْعَبْدُ فِي عَوْنِ أَخِيهِ.

96. இவ்வுலகக் கஷ்டங்களில் ஒரு கஷ்டத்தை ஒரு முஸ்லிமுக்கு எவர் நீக்குகிறாரோ அவருக்கு மறுமை நாளின் கஷ்டங்களில் ஒரு கஷ்டத்தை அல்லாஹ் நீக்கு கிறான். வறுமையுள்ள ஒருவருக்கு எவர் சுலபமளிக் கிறாரோ அவருக்கு இம்மையிலும் மறுமையிலும் அல்லாஹ் சுலபமளிக்கிறான். ஒரு முஸ்லிம் உடைய குறையை எவர் மறைக்கிறாரோ அவருடைய குறையை இம்மையிலும் மறுமையிலும் அல்லாஹ் மறைக்கிறான். அடியான் தன் சகோதரனுக்கு உதவி செய்யும் கால மெல்லாம் அவ்வடியானுக்கு அல்லாஹ் உதவி செய்து கொண்டே இருப்பான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம்

مَنْ وَلَّاهُ اللّٰهُ شَيْءً مِنْ أُمُوْرِ الْمُسْلِمِيْنَ فَاحْتَجَبَ عَنْ حَاجَتِهِمْ وَفَقِيْرِهِمْ اِحْتَجَبَ اللّٰهُ دُوْنَ حَاجَتِهِ.

97. முஸ்லிம்களின் காரியங்களில் ஏதாவது ஒரு காரியத்திற்கு அல்லாஹ் ஒருவரை காரியஸ்தராக்கி

அவருக்கும் மக்களுக்கும் அவர் திரையிட்டுக் கொள்வாராயின் அவருடைய தேவைக்கு அல்லாஹ் திரையிட்டுக் கொள்வான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூமர்யம் அஜ்தீ (ரலி) நூல்: அபூதாவூத், திர்மிதீ

مَنْ يَقُلْ عَلَيَّ مَا لَمْ أَقُلْ فَلْيَتَبَوَّأْ مَقْعَدَهُ مِنَ النَّارِ.

98. நான் சொல்லாத ஒன்றை என் மீது எவர் சொல்கிறாரோ அவர் நரகில் தன்னுடைய இருப்பிடத்திற்கு ஒதுங்கட்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: ஸலமத்துப்னுல் அக்உ (ரலி) நூல்: புகாரீ

اَلْمُؤْمِنُ الَّذِىْ يُخَالِطُ النَّاسَ وَيَصْبِرُ عَلَى أَذَاهُمْ خَيْرٌ مِّنَ
الَّذِيْ لاَ يُخَالِطُ النَّاسَ وَلاَ يَصْبِرُ عَلٰى أَذَاهُمْ.

99. மக்களுடன் கலந்து உறவாடி அவர்களின் நோவினையைச் சகித்துக் கொள்பவர், மக்களுடன் கலந்து உறவாடாமலும் அவர்களின் நோவினையைச் சகிக்காமலும் இருப்பவரை விடச் சிறந்தவர் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: இப்னு உமர் (ரலி) நூல்: இப்னுமாஜா

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரி ஹதீஸ் எண் 160 காண்க.*

وَالَّذِي نَفْسِي بِيَدِهِ لأَنْ يَأْخُذَ احدكُمْ حَبْلَهُ فَيَحْتَطِبَ عَلى ظَهْرِهِ خَيْرٌ لَّهُ مِنْ انْ يَأتِيَ رَجُلاً يَسْأَلُهُ أعْطَاهُ اوْ مَنَعَهُ.

*100. எவன் கரத்தில் என் ஆன்மா இருக்கிறதோ அவன் மீது சத்தியமாக(க் கூறுகிறேன்) உங்களில் ஒருவர் தம் முடைய கயிற்றை எடுத்துக் கொண்டு தமது முதுகில் விறகைச் சுமந்து (வாழ்வது) கொள்வது, அவர் மற்றவரிடம் சென்று (யாசகம்) கேட்பதைப் பார்க்கினும் சிறந்தது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரீ

*விரிவான விபரங்களுக்கு எம்மால் மொழி பெயர்க்கப்பட்ட தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ ஹதீஸ் எண் 697, 698 காண்க.*

يَا مَعْشَرَ الشَّبَابِ مَنِ اسْتَطَاعَ مِنْكُمُ الْبَائَةَ فَلْيَتَزَوَّجْ فَإِنَّهُ أغَضُّ لِلْبَصَرِ واَحْصَنُ لِلْفَرْجِ وَمَنْ لَمْ يَسْتَطِعْ فَعَلَيْهِ بِالصَّوْمِ فَإِنَّهُ لَهُ وِجَاءٌ.

*101. இளைஞர்களே உங்களில் உடலுறவுக்கு சக்தி யுள்ளோர் திருமணம் செய்து கொள்ளவேண்டும். சக்தி யில்லாதோர் நோன்பு நோற்பது அவசியம். அது அவருக்குக் காயடிப்பதாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.*

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) நூல்: புகாரீ, முஸ்லிம்

وصلى الله على سيدنا محمد وعلى آله
وصحبه اجمعين والحمد لله رب العالمين

# நூலாசிரியர் பற்றி

*கையிலே ஒரு துணிப்பை*
*எளிய நடை*
*எளிய உடை*

*இந்தக் கோலத்தில் மலேசியா திருநாட்டை வலம் வந்தது ஒரு உருவம். மக்கமா நகரிலும் மதீனாபுரியிலும் மடக்கி மடக்கி உலா வந்தது அந்த உருவம்.*

*அந்த உருவத்தை அறிமுகமில்லாத எவரும் பார்த்தால் யாரோ ஒரு முஸாபிர் என்றுதான் எண்ணுவர். அதே நேரத்தில் உத்தமபாளையம் எஸ்.எஸ். ஹளரத்தைத் தெரியுமா? என அவர்களிடம் கேட்டால் ''பார்த்த தில்லை.'' ஆனால், அவர்களின் அறிவுக் கருவூலங் களை அள்ளி அள்ளி பருகியுள்ளேன்'' என்று கூறுவர். அந்த அறிவுக் கருவூலங்களை வாரி வழங்கிய ஞானவள்ளல் இதோ இந்த முஸாபிர் தான் எனக் கூறினால் அவர்கள் அதை நம்ப மிக யோசிப்பர்.*

*ஆமாம்! ஆடை அலங்காரங்களை வைத்து தகுதியை, திறமையை எடைபோடும் இன்றைய காலத் திலேயேதான் அப்படியொரு அற்புதப்பிறவி நம்மிடையே நடமாடும் ஞானக்கலைக் கழகமாக பவனி வந்து கொண்டிருந்தது.*

*எளிய தோற்றம், வலிய கருத்துக்கள்! போட்டி, பொறாமை, சூதுவாது இவற்றின் பொருள் தெரியாது*

குழந்தை உள்ளம். அச்சாணி என்று புலவர்கள் வர்ணிப் பார்களே, அவ்விலக்கியங்களுக்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர்.

அடுக்குச் சொற்களை அள்ளிவீசி, கவர்ச்சித் தோரணையில் பேசும் மிடுக்கும் மிரட்டும் அவர்களிடம் காணமுடியாது. எளிய சொற்கள், செறிந்த கருத்துக்கள், சுளை உரித்த கனிகளைப் போல் அனைத்தும் ஆதாரப் பேருண்மைகள். ஹதீஸின் அடிப்படைகள்.

அயல்நாட்டு ஆட்சியாளர்களும் அமைச்சர் பெருமக்க ளும் சரியாசனம் தந்து கௌரவித்து வரவேற்று கண்ணி யம் பெற்றவர்கள். வெளிநாடு சென்று திரும்புவர்கள், வெறுங்கையோடு சென்று, நிறை பொருட்களோடு மீள்வது கண்கூடு. ஆனால், பன்முறை சிங்கை, மலே ஷியா, பிலிப்பைன், வியட்நாம், அரப் நாடுகள் ஆகிய வற்றிற்குச் செல்லும் போதும் ஒரு துணிப்பை, பேனா, நோட்புக் ஆகியவைகளே. வரும்போதும் அவைகளே. சுங்க அதிகாரிகள் இச்செயல் கண்டு வியப்புட மேலிட பெருமதிப்பளித்து மகான் எனக் கருதி கண்ணித்துடன் ஒதுங்கி வழிவிடுவர்.

கடந்த 1958ஆம் ஆண்டு உத்தமபாளையத்தின் மும் மணிகள் என்று புகழப்படும் மௌலானா எஸ்.எஸ். ஹளரத் அவர்கள், சிறந்த எழுத்தாளரும் பேச்சாளருமான மௌலானா பி.எஸ்.கே. முஹம்மது இப்ராஹீம் பாக்கவி அவர்கள், பாகியாத்துஸ் ஸாலிஹாத் - வேலூர்,

மன்பஉல் உலா - கூத்தாநல்லூர், மஹ்லரா - காயல்பட் டினம் போன்ற அரபிக் கல்லூரிகளில் முதல்வராகப் பணியாற்றி ஆயிரக்கணக்கான உலமா பெருமக்களை உருவாக்கிய அல்லாமா பி. முஹம்மது அபூபக்கர் ஹளரத் கிப்லா ஆகிய மூவரும் புனித ஹஜ்ஜிற்குச் சென்றிருந்தனர்.

அங்கு சென்ற மும்மணிகளையும் கௌரவிக்கும் பொருட்டு திரு கஃபாவின் திரை அன்பளிப்பாக வழங்கப் பட்டது. அப்புனிதத் துணையை உத்தமபாளையம் நைனார் முஹம்மது பெரிய பள்ளிவாசலுக்கு அம்மூவ ரும் அன்பளிப்பாக வழங்கி விட்டனர்.

தவிர, நாகூர் பாதுஷா நாயம், அஜ்மீர் நாயகம். முஹ்யித்தீன் ஆண்டகை, போன்ற வலிமார்களையும் ஹளரத் அலி (ரலி) ஹளரத் அபூஹுரைரா (ரலி) ஹளரத் ஹுதைபத்துல் யமான் (ரலி) போன்ற ஸஹாபா பெரு மக்களையும் கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் பன்முறை கனவில் தரிசிக்கும் பாக்கியம் பெற்றவர்கள்.

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற மேதை சன் மார்க்க மூதறிஞர், தமிழகத்தின் கஜ்ஜாலி, நடமாடும் பல் கலைக்கழகம் என்றெல்லாம் தமிழ் பேசும் முஸ்லிம்களால் கௌரவிக்கப்பட்ட மாமனிதர்.

அன்னாரின் நூர்ல்களில் சில...

1. இஷாஅத்துல் ஹஸனாத் பீ தர்ஜுமத்தில் பாக்கி யாத்துஸ் ஸாலிஹாத் (1932)

வெளியீடு: அல்பாக்கியாத்துஸ் ஸாலிஹாத் அரபிக் கல்லூரி, வேலூர்.

2. திருமறைத் தமிழுரை (1934)
(திருக்குர்ஆன் தமிழ் மொழி பெயர்ப்பு)
வெளியீடு: சாந்திப்பிரகடன சபை, கூத்தாநல்லூர்

3. தப்ஸீருல் ஹமீத் பீ தப்ஸீரில் குர்ஆனில் மஜீத்

- முதல் பாகம் 1937, 1954, 1966
- இரண்டாம் பாகம் 1940, 1963
- மூன்றாம் பாகம் 1950, 1967
- நான்காம் பாகம் 1956, 1983
- ஐந்தாம் பாகம் 1958
- ஆறாம் பாகம் 1959
- ஏழாம் பாகம் 1961

வெளியீடு: ஹாஜி எம்.ஏ. ஷாஹுல் ஹமீத் சன்ஸ், சென்னை -5.

4. இஸ்லாம் மத விளக்கம் 1938, 1946, 1957, 1978

5. நற்குண நாதர்

6. நபிகள் கோன்

7. மகா உண்மையாளர்

8. திருத்தூதர்

9. நாயக வாசகம்

வெளியீடு: சன்மார்க்கத் தொண்டர் சபை, கூத்தாநல்லூர்

10. இமாம் கஜ்ஜாலி (1928)

11. ஹளரத் உமர் பாருக் (ரலி)

வெளியீடு: இஸ்லாமிய நூற்பிரசுரச் சங்கம், திருச்சி. (முதன் முதலாக தமிழில் திருக்குர்ஆன் தர்ஜுமா வெளியிட்டவர்கள்)

12. மௌலானா முஹம்மது அலீ ஜௌஹர் (1938)

வெளியீடு: ஒ.எஸ். சதக் தம்பி மரைக்காயர், சென்னை.

13. தஃலீமுல் இஸ்லாம் (1949)

வெளியீடு: தஃலீமுல் இஸ்லாம் புக்டிப்போ, சென்னை.

14. ஷஹீதே கர்பலா (1949)

15. குத்பா கொத்து

16. இஸ்லாமியத் திருமணம் (1955)

வெளியீடு: எஸ்.எஸ். அப்துர்ரஹ்மான், கூத்தாநல்லூர்

17. ஞானிபானு (1931 - 1950)

18. ஜவாஹிருல் புகாரீ (1950)

19. அல் - அன்வார் (1952)

20. அகத்தூய்மை (1952)

21. தஜ்ரீதுல் ஜாமிஇஸ் ஸஹீஹில் புகாரீ முதல் பாகம் 1954, 1987, இரண்டாம் பாகம் 1956, மூன்றாம் பாகம் 1957.

(தற்போது மலிவுப் பதிப்பாக விற்பனையாகிக் கொண்டிருக்கிறது.)

22. ரமலான் நோன்பு (1957)

23. ஞானவழி (1961)

24. ஹளரத் முஹம்மத் ரசூலுல்லாஹ்
- முதல் பாகம் (1926)
- இரண்டாம் பாகம் (1964)
- மூன்றாம் பாகம் (1968)

25. வீரசிற்பி (1963)

26. ஹாஜிகளின் தோழன் (1964)

27. கன்ஜுந்தக்காயிக் (இஸ்லாமியச் சட்ட விளக்க நூல்)

28. அண்ணல் நபியின் அறநெறி (1972)

29. திருக்குர்ஆன் தொகுக்கப்பட்ட வரலாறு (1972, 2003)

30. பிதாயத்துல் ஹிதாயா (1973)

பொருளடக்கம்

# நபிகளாரின் தனித்தன்மைகள்

*(ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்)*

## ''கஸாயிஸுந்நுபுவ்வத்''


ஹாஜி M.A. [illegible]
புத்தகங்கள் [illegible]
வெளியிடுபவர்கள், [illegible]
நெ: 21, ஹைறு — ரோடு, திருவல்லிக்கேணி
சென்னை — 5. ☎ 22544301


மொழி பெயர்ப்பு:
திருக்குர்ஆன், ஸஹீஹைன் விரிவுரையாளர்

எஸ்.எஸ். முஹம்மது அப்துல் காதிர் பாக்கவி (ரஹ்)
உத்தமபாளையம்


வெளியீடு:
பிஸ்மி பப்ளிஷர்ஸ்
822-4, அண்ணா சாலை
மக்கா மஸ்ஜித் வளாகம்
சென்னை - 600 002.
போன்: 52142766, 52104855